சிற்றிலக்கியப் பாதுகாப்புத் திட்ட வெளியீடு : 5

கவிராயர் நல்லசிவனார்

இயற்றிய

# மதுரைச் சொக்கநாதர்

# வருக்கக் கோவை



கழகப் புலவர்

இறைக்குருவனார்

எழுதிய

உரையுடன்





திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
79, பிரகாசம் சாலை, சென்னை-1.

1979

திவாமங்கலம் முத்தையா இறைக்குருவன் (1942)



கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி 2

கழக வெளியீடு : கடுசுகச

முதற் பதிப்பு : ஜூன் 1979



MADHURAI CHOKKANAATHAR VARUKKAKKOVAI

அப்பர் அச்சகம், சென்னை-1. (1/-)




# பதிப்புரை

தமிழில் விளங்கும் சிற்றிலக்கிய வகைகளுள் கோவை என்பதும் ஒன்று. அஃதாவது உருவும் திருவும் பருவமுங் குலனும் குணனும் அன்பும் முதலியவற்ருல் தம்முள் ஒப்புடையராகிய தலைமகனுந் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் அன்றிப் பால் வகையால் தாமே எதிர்ப்பட்டுக் களவிற் புணர்ந்து இன்பந் துய்த்துப் பின் கற்பு நிலையின் இற்கிழமை பூண்டு, விருந்து புறந் தந்து அருந்தவர்ப் பேணி ஒழுகிவரும் இல்லற இயற்கை நுட்பத்தைப் புனைந்துரை வகையால் எடுத்துரைத்து ஒரு கோவையாக்கிக் கற்போர்க்கும் கேட்போர்க்கும் இன்பம் பயக்கும் துள்ளலோசையான் அமைந்த கட்டளைக் கலித்துறைப் பாக்களால் பாடப்பெறுவதாகும். இவ்வா றமைந்தன திருச்சிற்றம்பலக் கோவையார், தஞ்சைவாணன் கோவை முதலியன பலவுள. மற்று, மொழி முதல் எழுத்துக்களை அகரவரிசை முறைப்படி முதலாகக் கொண்ட கட்டளைக் கலித்துறைப் பாக்களான் அகத்திணைத் துறைகளை மேற்கூறியாங்கு ஒரு கோவைப்படப் புனைந்துரைப்பது வருக்கக்கோவை எனப்படும்.

மதுரையின்கண் எழுந்தருளியுள்ள ஆலவாயண்ணலைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, சொற்பொருட் சுவையும் விழுமிய ஓசை நலமும் வாய்ந்து விளங்கப் புனையப்பட்டுள்ள **மதுரைச் சொக்கநாதர் வருக்கக்கோவை** என்னும் இந் நூல் திருப்பனந்தாள் மடவளாகத்து 19ஆம் பட்டத்தில் எழுந்தருளியிருந்த திருப்பெருந்திரு **சாமிநாதத் தம்பிரான் அடிகளார்** அவர்களின் திருவுளப் பாங்கின் வண்ணம், மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பேராசிரியராக விளங்கிய கவிராயர் **நல்லசிவனுர்** அவர்களால் இயற்றப்பட்டது.

பேராசிரியர் **பு. சி. புன்னைவனநாத முதலியார்** அவர்கள் தாமெழுதிய குறிப்புரையுடன் இந் நூலின் முதற்பதிப்பை 1948இல் வெளியிட்டுள்ளார். நாவலர் பண்டாரகர் **சோமசுந்தர பாரதியார்**, பண்டிதமணி **கதிரேசச் செட்டியார்**, தவத்திரு **விபுலானந்த அடிகள்**,

பெரும்புலவர் **வெ. ப. சுப்பிரமணிய முதலியார்** ஆகிய அறிஞர் பெரு மக்கள் இந் நூலுக்கு மதிப்புரை வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

இந் நூல் இப்போது யாண்டும் விற்பனைக்குக் கிடைக்காமை யால், இதனைக் கழகம் வகுத்துள்ள சிற்றிலக்கியப் பாதுகாப்புத் திட்டத்தின் கீழ்க், கழகப்புலவர் **இறைக்குருவனார்** தெள்ளிய தமிழ் நடையில் வரைந்த உரையுடன் கழகப் பதிப்பாக வெளியிடு கின்றோம். நூலாசிரியரின் அருமைச் செல்வரான புலவர் **சேது ராமலிங்கன்** அவர்கள் இந் நூலை வெளியிடுவதுபற்றிப் பெரிதும் மகிழ்ந்து, நூலாசிரியர் வரலாறும் எழுதியுதவினர். அவர்க்குக் கழகத்தின் நன்றி உரியதாகும்.

பல்லாற்றானும் சிறப்பு வாய்ந்த இந் நூல் பள்ளி கல்லூரி நூல்நிலையங்களிலும், பொது நூல்நிலையங்களிலும் இடம்பெறுவது இன்றியமையாததாகும். பல்கலைக் கழகத்தார் கல்லூரி மாணாக் கர்க்குப் பாடமாக வைப்பின் நன்று. உரியவர்கள் ஆவன செய்யு மாறு வேண்டுகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# ஆக்கியோன் முன்னுரை*

## திருவாசகம்

*"தாரா அருளொன் றின்றியே தந்தாய் என்றுன் தமரெல்லாம்
ஆரா நின்றார் அடியேனும் அயலார் போல அயர்வேனே
சீரார் அருளாற் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை வைக்க வேண்டும் பெருமானே."*

## திருவிளையாடல்

### சொக்கலிங்கமூர்த்தி

*"பூவி னாயகன் பூமக ளாயகன்
காவி னாயக னாதிக் கடவுளர்க்
காவி நாயகன் அங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி யேத்துவாம்."*

கோடீச்சுரம் ஏரண்டபுரம் என நூல்களில் வழங்குவதும், கும்ப கோணத்திற்கு அருகில் காவிரி நதியின் வடபாலுள்ளதும், தேவாரம் பெற்றதுமாகிய கொட்டையூர் என்னுந் தலத்தில் பரம் பரைச் சைவாசாரிய மரபினரும், கோடீச்சுரக் கோவை முதலிய பல பிரபந்தங்களை ஆக்கியோரும், தஞ்சை சரபோஜி மன்னர் சமூக வித்துவானும் ஆகிய ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரவர்கள் திருமரபி லுதித்துத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 19 ஆம் பட்டத்துத் தலைவர்களாக வீற்றிருந்த அருங்கலை விநோதரும், ஆயிரம் ரூபாய் தமிழ்ப் பரிசு முதலிய எண்ணிறந்த பரிசுகள் வழங்கித் தமிழ்மொழி வளர்ச்சிக்கு உதவிவந்தவர்களுமாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமி நாத சாமிகள், சங்க நூல்களை நாடுதோறும் நகர்தோறுஞ் சென்று தேடி யாராந்து குறிப்புரை அரும்பதவுரை முதலியனவும் எழுதி அச்சிற் பதிப்பித்து உலகத்திற்குதவிய பேருபகார சீலரான காலஞ் சென்ற சென்னை பிரமஸ்ரீ மஹா மஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய

*இந் நூலின் முதற்பதிப்புக்கு நூலாசிரியர் வரைந்த முன்னுரை.

கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களிடம், மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் சைவ வேளாண் மரபினருள் புலமை வாய்ந்தவர் எவரேனும் இருப்பின் அவரால் தங்கள் ஆத்மார்த்த மூர்த்தியாகிய **மதுரைச் சொக்கநாதர்**மீது ஒரு வருக்கக் கோவை இயற்றுவிக்கச் செய்தால் அதற்குரிய பரிசு வழங்குவதுடன் நூலை மடத்து வெளியீடாக வெளியிடவுங் கூடுமென்று தங்கள் கருத்தைத் தெரிவிக்க அதனை பிரமஸ்ரீ ஐயரவர்கள் எனக்கறிவித்து அங்ஙனம் பாடுக என்று கூறியருளினர்கள்.

அங்ஙனமே 'மதுரைச் சொக்கநாதர் வருக்கக் கோவை' என்னும் பெயருடன் இந் நூலைப் பாடி முடித்து, பனசைத் திருமடத்து 19ஆம் பட்டத்து ஸ்ரீ-ல-ஸ்ரீ தலைவர்களை நேரிற் றரிசித்து நூலைச் சமர்ப்பித்தேன். அவர்கள் நூலைப் பார்வையிட்டு அதற்குரிய பரிசும் வழங்கினர்கள். பின் அவர்கள் சுபானுஸு பங்குனிமீ 13ஆம் நாள் (26-3-1944) ஞாயிற்றுக்கிழமை பரிபூரணமடைந்தார்கள்.

இப்பொழுது 20-வது பட்டத்துத் தலைவர்களாக எழுந்தருளியிருக்கிறவர்களும், தமிழபிமானம் மிகவும் வாய்ந்தவர்களுமான ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருணந்திசுவாமிகள் திருமுன் கோவை அச்சிடும் விஷயமாகத் தெரிவித்தேன். அவர்கள் கால விளம்பனமின்றி, உடனே நூறு வெண்பொற்காசுகளை யருளி, நூலை வெளியிடும்படி அனுக்கிரகித்தார்கள். அவர்கள் வள்ளன்மை மிக மிகப் போற்றத்தக்கது. அவர்கட்கு எனது அன்பார்ந்த வணக்கத்தையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூலை ஆக்குவித்த ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாதசுவாமிகளவர்கட்கும், உலகமறியாதிருந்த என்னையும் பொருட்படுத்தி என் பெயரை, சுவாமியவர்கட்குத் தெரிவித்து நூலை ஆக்குமாறு செய்த பிரமஸ்ரீ மஹா மஹோபாத்தியாய ஐயரவர்கட்கும் எனது நன்றி யுரித்தாகின்றது. இந்நூல் அச்சிடும் விஷயமாக என்னை இப்போதுள்ள பனசை மடத்து ஸ்ரீ-ல-ஸ்ரீ தலைவர்களிடம் அழைத்துச் சென்று தரிசனை செய்வித்து, பொருளுதவுதற்குக் காரணராயிருந்த தருமபுர ஆதீனத் தமிழ்ப் புலவரும், திருப்பனந்

தாள் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியருமான திருவாளர் வித்துவான் ச. தண்டபாணி தேசிகரவர்கட்கு எனது அன்பார்ந்த நன்றி.

எனது தேகத்தளர்ச்சியையும் யான் வியா நோய்வாய்ப் பட்டிருத்தலையும் உணர்ந்த என் ஆருயிர் நண்பரவர்களும், திருநெல்வேலி மாவட்டம் புத்தனேரி என்னும் பதியை வாழ்க்கையிடமாகக் கொண்டுள்ளவர்களும், பல நகரங்களின் உயர்தரக் கல்லூரிகளில் தமிழாசிரியராக அமர்ந்திருந்தவர்களும், இப்பொழுது தருமபுர ஆதீனம் கீழ்த் திசைப் பல்கலைக் கல்லூரித் தலைமைத்தமிழ்ப் பேராசிரியராய் இருப்பவர்களுமாகிய திருவாளர் வித்துவான் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள் உரையாசிரியராகவும் பதிப்பாசிரியராகவும் இருந்து இந் நூலை அச்சிடுதற்குரிய பணிகளை யெல்லாம் ஏற்றுக்கொண்டு நூலை வெளிவரச் செய்தார்கள். அவர்கள் செய்த நன்றி என்றும் மறக்கற்பாற்றன்று. அவர்கட்கு எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துவதுடன், என்மீது கருணை கூர்ந்து இந் நூற்குப் பாயிர முதலியன எழுதியுதவி என்னைப் பெருமைப் படுத்தின ஆன்ரோரனைவர்க்கும் யான் எனது நன்றியைச் செலுத்துகின்றேன். இந் நூலை அச்சிற் பதித்து விரைவில் வெளிவரச்செய்த தருமபுர ஆதீனம் ஞானசம்பந்தம் பதிப்பகத்தார்க்கும் எனது நன்றி உரித்தாகுக.

இங்ஙனம்,

**சு. நல்லசிவன் பிள்ளை,**

ஆசிரியர்,
*மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை.*

*மதுரை,*
*30—11—1947.*

# அணிந்துரை

## நாவலர் டாக்டர். ச. சோமசுந்தர பாரதியார்

மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலைப் போதகாசிரியரும் நற்றமிழ்ப் பாவலருமான திருவாளர் நல்லசிவன் பிள்ளையவர்கள் இயற்றிய "சொக்கநாதர் வருக்கக்கோவை"யைப் படிப்பவர் பாராட்டுவார். இவ் வியற்றமிழாசிரியருக்குக் கவித்துவம் இயல் பமைவுடைமைக்கு இவ்வினிய நூலே போதிய சான்றாகும்.

இச் சொக்கநாதர் கோவைச் செய்யுள்கள் சொக்கப் பொன் னீர்மைய; உருகு பொன்னொழுக்கும் இறுகு பொன்னொளியும் ஒருங்குடைய. துறை நலத்தூய்மை பேணி, நடைநலமும் தொடையழகும் படைத்துடைய. நல்லகருத்துக்களை மெல்லெ ன்னோசையிற் செல்லுந்தொடராற் றெளிவோடினிமைதர விளக்குஞ் செவ்வியுடைய. இப்பனுவல், இதனை யாக்கியவர் மதிநுட்பம் நூலோடுடைய ரென்பதையும், இயற்புலமை வாய்ந்தவரென் பதையும் தெளிவாக்குகிறது.

இதனைப் பாடுவித்த திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துக் கர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சாமிநாத சுவாமிகளின் தமிழார்வமும், சொக்க நாதர்பால் அவர்கட்குள்ள பேரன்பும் இக் கோவை நின்றுநிலவ என்று மிலகும். பாவாணர் அருகிய இக் காலத்தில் பிள்ளையவர் களைத் தூண்டிக் கோவை பாடுவித்த சுவாமிகள், இன்னுமிப் புலவரையும் இவர்போன்ற பிறரையும் ஊக்கி உளங்கனிவித்துத் தமிழ்வளம் வளர்ப்பதே அவர்கள் பதவிக்கும் நிலைமைக்கும் சாலச் சிறப்புரிமை நிறுவுவதாகும்.

## முதுபெரும்புலவர், பண்டிதமணி மு கதிரேசச் செட்டியார்

தாங்கள் பாடிய "மதுரைச் சொக்கநாதர் வருக்கக்கோவை யைப்", படித்துப் பார்த்தேன். தங்களுக்கு இயல்பாக அமைந்த

பாட்டுவளம் மனத்தை யின்புறுத்தியது; சொற்பொருளழகுகள் மிக்கு விளங்குகின்றன; பண்டையோர் முறை பற்றிய அகப் பொருள் பாடும் ஒழுங்கு சிறந்துளது. தங்கள் அரிய கவித்துவ வியல்பை நன்குணர்ந்து மிக்க மகிழ்ச்சியடைந்து அதற்கறிகுறி யாக மூன்று வெண்பாக்கள் சிறப்புக்கவிகளாக எழுதி அனுப்பியுள் ளேன். என் பாட்டு வெள்ளையாயினும் தங்களன்பினால் அளயப் பெற்று இன்புறுத்தும் என்னும் துணிவுடையேன்.

*செல்வமலி கூடல் திகழ்சொக்க நாதர்க்கு*
*நல்வருக்கக் கோவை நவின்றணிந்தான்—கல்விப்*
*பொருளளித்து மாணவரைப் பொன்றுப் புகழ்சால்*
*தெருளளிக்கும் நல்லசிவன் தேர்ந்து,*

*சொல்லும் பொருளும் தொடையும் இசைமுதல*
*எல்லா நலனும் இனிதமைய—நல்லசிவன்*
*பாடுங் கவியிற் பயன்பெரிதோ மேற்புலவர்*
*நாடும் அவியின் நலம்.*

*காண்புலவர் நெஞ்சகத்தும் கற்பவர் நாவகத்தும்*
*மாண்புறவுற் றெஞ்ஞான்றும் வாழியரோ—நீணிலத்து*
*நல்வருக்கம் பாராட்டு நல்லசிவ னுங்கவிஞன்*
*சொல்வருக்கக் கோவைத் துறை.*

## தவத்திரு விபுலானந்த அடிகள்

அன்புநிறைந்த உளத்தினராகிய நல்ல சிவனுர் வகுத்த இந் நூல் தெள்ளத்தெளிந்த நடையினதாகிச் சிந்தைக்கினிமை பயக்குஞ் செவ்வி வாய்ந்தது. ஆலவாயமலனடியிணைக்குச் சூட்டிய அணி மலர்மாலைபோன்று தமிழ்மணங் கமழ்வது. இதனைச் செய் தோரும் செய்வித்தோரும் புகழுக்குரியராயினர்; இது தமிழுக்குரிய தாயிற்று; தமிழ்மொழிக்குச் சிறப்பாகிய அகத்திணை மேலதாதலின்.

அகத்திணையென்பது "காதலிருவர் கருத்து ஒப்ப ஆதரவு பட்ட" அன்பொழுக்கம். ஈதலின்பம் அறத்துக்கு அணிகலமாயின வாறுபோலக் காதலின்பம் கவிதைக்கு அணிகலமாய்த் திகழ்வது.

உலகினை நிலைபெறச்செய்வது காதல். உயர்குண மனைத்துந் தோன்றுவதற்கு நிலைக்களமாயது உண்மைக்காதல்.

*"ஊக்கம் உறுதி உவகை ஒண்மை*
*ஆக்கம் வண்மை அறிவு நிறையுடைமை*
*என்றிவை யனைத்தும் இனையன பலவும்*
*ஏதமில் காதலி னியைந்தன அதனால்*
*ஐந்திணை நெறியெனும் அன்பொழுக்கத்தினை"*

நான்மாடக்கூடலி லிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப்புலவர் பெருகப் பாடி உவகை கூட்டினர். ஒருவனுக்கும் ஒருத்திக்கு மிடையேயுள்ள அன்பு இறைவனுக்கும் உயிருக்கும் இடையேயுள்ள தொடர்பினை நிகர்த்த தென்பார் யோகநூலார். ஓவாவின்பத் தொண்ணிதிச் செல்வராகிய வாதவூரடிகள் பாவைபாடிய வாயாற் கோவை பாடினர். ஔவைப் பிராட்டியார் அசதிக்கோவை பாடினர். மதுரைச் சொக்கநாதரைப் பாடிய இவ் வருக்கக்கோவை முன்னோர் நூலே போன்று தமிழ்மொழிவாணர்க் கினிமை பயந்து என்றும் நின்று நிலவுவதாக.

## பெரும்புலவர் வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலைப் போதகாசிரியர் திருவாளர் நல்லசிவன் பிள்ளையவர்கள் மதுரைச் சொக்கநாத சுவாமிமீது பாடியுள்ள அக்கர வருக்கக்கோவையை அவருடனிருந்தும், தனித்தும் படித்துப்பார்த்து மகிழ்வுற்றேன். அதனை வாசிப்போர், அதனில் அவரியற்றும் எல்லாப் பாட்டுக்களிலும் இயல்பாகக் காணப்படும் இனிய தொடைநயம், எளிய நடைநயம், சொன்னயம், தொனிநயம் முதலிய பன்னயங்களையுங் கண்டு பாராட்டுவார்க ளென்று கருதுகின்றேன்.

*எத்திக்கும் போற்ற எழுத்துவருக் கக்கோவை*
*தித்திக்குந் தேனும் செழுங்கனியும்—ஒத்ததென*
*நல்லமது ரைச்சொக்க நாதர்மேல் நன்கிசைத்தான்*
*நல்லசிவ நாமகவி ஞன்.*

# நூலும் நூலாசிரியரும்

''சைவ நன்மணி'', 'தெய்வக் கவிமணி' வித்துவான்

**க. சேதுராமலிங்கன்,**

*தமிழாசிரியர், அரசினர் மேனிலைப்பள்ளி, இராமேச்சுரம்*

'மதுரைச் சொக்கநாதர் வருக்கக்கோவை' என்னும் சிற்றிலக்கியத்தை இயற்றிய ஆசிரியரான திரு நல்லசிவன் பிள்ளை அவர்கள், திருநெல்வேலியைச் சார்ந்த சம்புலிங்கபுரம் என்னுஞ் சிற்றூரில் சிவநேயச் செல்வராய் விளங்கிய திரு சுப்பிரமணிய பிள்ளையவர்கட்கும், அவர்தம் இல்லக்கிழத்தியாராகிய சண்முகத்தம்மையார் அவர்கட்கும் 8—6—1882இல் நன்மகனாகப் பிறந்தார். சிறப்புற வளர்ந்து கல்வி பயிலும் பருவமெய்திய காலை, இவர்தம் அம்மான்களான திருவாளர்கள் திருவண்ணநாதக் கவிராயர், திரவிய சங்கர நாராயணக் கவிராயர் ஆகிய இருவருமே இவருக்கு ஆசிரியராய் அமைந்து கல்வி பயிற்றுவித்தனர். அவ் விருவரும் தமிழினிதறிந்த தகைமைசால் புலவர்பெருமக்களாதலான் தம் மருகனின் பருவங்கட்கேற்பப் படிப்படியாக இலக்கண இலக்கியங்களைப் பாங்குறக் கற்பித்து வந்தனர். நல்லசிவனார் அருந்தமிழ் நூல்கள் பலவற்றையும் ஆர்வமுறப் பயின்று விழுமிய புலமைவள மெய்தினார்; சான்றோர் போற்றும் நல்லொழுக்கம் உடையராய் விளங்கினார்.

மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவரான இராமநாதபுரம் அரசர் மாட்சிமிகு இராசேசுவர முத்துராமலிங்க சேதுபதியவர்களும், அத் தமிழ்ச் சங்கத்தின் கண்ணியச் செயலாளராக இருந்து, பின் துணைத் தலைவராகப் பொறுப்பேற்றவருமான திரு. டி. சி. சீனிவாச ஐயங்கார் அவர்களும் நல்லசிவனார்தம் நற்றமிழ்ப் புலமை நலங்களைத் தக்கார் வாயிலாகக் கேள்வியுற்று அவரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலையில் ஆசிரியராக அமர்த்தினர். நல்லசிவனாரும் தலைவர்

கண்டு மகிழுமாறு தம் கடப்பாடுகளை மிகவுஞ் செம்மையாகச் செய்துவந்தார்.

மாணுக்கர் உளங்கொளப் பாடம் பயிற்றுதலில் சிறப்புற்று விளங்கிய நல்லசிவனுர் அரிய கருத்துக்களை யமைத்து இனிய சொற் களைக் கொண்டு பாடல்கள் புனைவதிலும் வல்லுநராய்த் திகழ்ந்தார். இவர் இயற்றியன சில சிற்றிலக்கியங்களும் வாழ்த்து, வரவேற்பு, பாராட்டு, கையறுநிலை முதலியன பற்றிய தனிப்பாடல்களுமாகும்.

பெரும் பேராசிரியர், தென்கலைச் செல்வர், பண்டாரகர் உ. வே. சாமிநாத ஐயரவர்களால் இராமநாதபுரம் அரசர் மாட்சி மிகு முத்துராமலிங்க சேதுபதி அவர்கள்பால் அறிமுகப்படுத்தப் பெற்று 1910 முதல் 1950 முடிய நாற்பத்தோராண்டுகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் ஆசிரியராக விளங்கினுர் நல்லசிவனுர். சேது சமத்தானப் பெரும்புலவர்களான திருவாளர்கள் இரா. இராகவை யங்கார், மு. இராகவையங்கார் ஆகியோரும், உ. வே. சாமிநாத ஐயர், நாவலர் சோமசுந்தர பாரதியார், கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனுர், விபுலானந்த அடிகளார், பண்டிதமணி கதிரேசச் செட்டியார் முதலியோரும் இவர்தம் இனிய நண்பர்களாவர்.

திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், குன்றக்குடி, மதுரை ஆகிய இடங்களிலுள்ள திருமடத்துத் தலைவர்களெல்லாம் நல்லசிவனுர் அவர்களைப் பாராட்டியும் பரிசளித்தும் சிறப்பித் துள்ளனர். தேவகோட்டைத் திருநெறிய செந்தமிழ்ச் செல்வர் வள்ளல் சேவு மெய்யப்பச் செட்டியார் அவர்கள் நல்லசிவனுர்பால் நட்பும் நன்மதிப்புங்கொண்டு அன்புடன் பல உதவிகளைக் கால மறிந்து செய்துவந்தனர்.

திருப்பனந்தாள் மடவளாகத்தில் 19ஆம் பட்டத்துத் தலை வராக எழுந்தருளியிருந்த திருப்பெருந்திரு காசிவாசி சாமிநாதத் தம்பிரான் அடிகளார், பெரும் பேராசிரியர் பண்டாரகர் உ. வே. சாமிநாத ஐயரவர்களிடம், தமது வழிபடு கடவுளாகிய மதுரைச் சொக்கப் பெருமான்மீது சிறந்ததொரு வருக்கக்கோவை இயற்று வித்தால் அதற்குத் தக்க பரிசு வழங்குவதுடன் தமது திருமடத்து

வெளியீடாக வெளியிடவுங் கூடுமென்று தெரிவித்தனர். அடிகளார் தம் உள்ளக் கிடக்கையை யறிந்த உ. வே. சா. அவர்கள் மதுரைச் சொக்கநாதர் வருக்கக்கோவை இயற்றுதற்குத் தக்கார் நல்ல சிவனாரே எனத் துணிந்து அவர்தமக்குத் தெரிவித்தனராக, அவரும் இச் சீரிய நூலைச் செவ்விதிற் புனைந்து பனசைத் திருமடத்துத் தலைவர் அவர்களை நேரிற்கண்டு வணங்கி ஒப்படைத் தனர். அவர்கள் நூலைப் பார்வையிட்டு மனமகிழ்ந்து பரிசும் பாராட்டும் வழங்கினார்கள்.

'வருக்கக் கோவை' யென்பது, அகர முதலிய எழுத்து வரிசை-மொழிக்கு முதலாம் எழுத்துக்கள் முறையுற ஒவ்வொரு பாடலினும் முதலில் வருமாறு அமைத்துக் கட்டளைக் கலித்துறையால் பாடப் படுவதாகவும், அகத்திணைத் துறைகளை ஒரு கோவைப்படக் கூறுவதாகவும் அமைவதாகும்.

இச் சிற்றிலக்கியத்தைப் பயில்வார் இதன்கண் மீயுயர் சிறப் பனைத்தும் ஓவறவிருக்கை கண்டு உள்ளத்தடங்கா உவகையுறுவர். கோவை யென்பது அகத்திணைப் பொருளைத் தன்னகத் தடக்கி, இல்லறத்திற் கேதுவாய் உலக இன்பந் துய்ப்பிப்பதொரு படிமுறை நூலாயினும் போகந் தீர்ந்துழியே மோக்கமாகலின் அம் முறை யானே, உலகங் கடந்த இன்பத்திற்கும் காரணம் ஆமாறு உய்த் துணர்ந்து கொள்ளலாம்.

26—3—1944இல் திருப்பெருந்திரு சாமிநாதத் தம் பிரானடிகள் சிவப்பேறுற்றமையின் 20ஆம் பட்டத்தில் எழுந் தருளிய திருப்பெருந்திரு அருணந்தித் தம்பிரானடிகள்பால் இக் கோவை பற்றிய செய்தியை நூலாசிரியர் தெரிவித்தனராக, அவர்கள் பொருளுதவி செய்து நூலை வெளியிடத் திருவுள்ளங் கொண்டார்கள். பேராசிரியர் பு. சி புன்னைவனநாத முதலியா ரவர்கள் இக் கோவைக்குக் குறிப்புரை வரைந்து பதிப்பித்து வெளி யிட்டார்கள். இந் நூலின் முதற்பதிப்பு 1948இல் வெளிவந்தது.

இந் நூலாசிரியர் இயற்றிய வேறு நூல்கள் 'மதுரைத் திருவிளையாடல் போற்றித் திருவிருத்தம்' முதலியனவாகும். இம்

மதுரைத் திருவிளையாடற் போற்றித் திருவிருத்தம் "மதுர மித்திரன்" ஆசிரியர் திரு. ந. சுப்பிரமணியம் அவர்களின் தந்தை யார் திரு. நடேச ஐயரவர்களின் அறுபாணுண்டு நிறைவு விழா நினைவாக அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது.

இத்தகைய சிறப்புடைய பெரியார் நாற்கவிராயர் நல்லசிவனுர் அவர்கள் தம் எழுபதாம் அகவையில் நெல்லையை யடுத்த பாளையங் கோட்டையில் 26—3—1952இல் இறைவன் திருவடி நீழல் எய்திஞர்கள்.

வாழ்க நல்லசிவனுரின் நற்புகழ்!




உ

# மதுரைச் சொக்கநாதர் வருக்கக் கோவை

## மூலமும் உரையும்

### காப்பு

**நாடும் பரம்பொரு ளாமது ரைச்சொக்க நாதர்சரண்**
**நீடும் வருக்கத் தொடையாற் புனைய நெறித்தமிழிற்**
**பாடுந் திறன்தந்து முன்னிற்கு நித்தம் பணிபவர்க்கு**
**விடுந் தருஞ்சித்தி வேழத்தின் பாத மிளிர்மலரே.**

(இதன் பொருள்) என்றும் தம்மைப் பணிவார்க்கு வீடு பேறும் வழங்கும் சித்தி விநாயகப் பெருமானும் ஆனைமுகப் பிள்ளையாரின் திருவடிகளாகிய விளங்குகின்ற மலர்கள், விரும்பப்பெறும் பரம்பொருளாகிய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் ஆலவாயண்ணலின் திருவடிகளை, நிலைபெற்றிருக்கும் வருக்க மாலையால் அணிசெய்யும் பொருட்டு இலக்கண நெறியிற் சிறந்த தமிழால் பாடுதற்கு ஆற்றலை யளித்து முந்நிற்கும் (என்றவாறு.)

**(விளக்கம்)** தொடை - மாலை; வேழம் - யானை : யானைமுகக் கடவுள்; மிளிர் - விளங்கும்.

வருக்கத்தொடையாவது : அகர முதலிய மொழிமுதல் எழுத்துக்கள் ஒவ்வொரு கலித்துறைக்கும் முதலாக வர முறையே தொடுப்பது. மலர் மாலை போல் வாடுதல் இன்மையின் 'நீடும் வருக்கத் தொடை' என்றார். பணிபவர்க்குத் தரும் என்று தம்மைப் பிறர்போற் கூறினார்; பொதுமையிற் கூறினார் எனினுமாம்.

### 1. காட்சி

*தலைமகன் தலைமகளைக் காணுதல்.*

**அணியா ரரவிந்தந் தன்காவி பூங்குமி ழார்ந்தலர்ந்து**
**மணியாருங் கோங்க மரும்பிச்செங் காந்தள் மலர்ந்துசெம்பொற்**

**பணியாரம் பூண்மது ரைச்சொக்க நாதர் பனிமலயத்**
**திணியார நன்பொழி லூடொரு வல்லி திகழ்கின்றதே.**

(இ - ள்.) செம்மையான பொன்னாலாகிய அணிகலன்களையும் மாலையையும் அணிகின்ற, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள ஆலவாய்ப் பெருமானது குளிர்ச்சி பொருந்திய பொதிய மலையின்கண் சந்தன மரங்கள் அடர்ந்த நல்ல சோலையினிடையே ஒரு கொடி அழகு நிறைந்த தாமரையும், குளிர்ச்சி பொருந்திய குவளையும் அழகிய குமிழும் பொருந்தி மலரப்பெற்றும் அழகு மிக்க கோங்கின் முகை அரும்பப்பெற்றும் காந்தள் மலரப் பெற்றும் விளங்குகின்றது (எ - று.)

(வி - ம்.) அரவிந்தம் - தாமரை; காவி - குவளை; ஆர்ந்து - பொருந்தி; பணி - அணிகலன், பாம்பு; ஆரம் - மாலை; மலயம் - பொதியில்; ஆரம் - சந்தனம்; பணிஆரம் – உம்மைத் தொகை.

செம்பொற் கொடி எனக்கூட்டிப், பணி என்பதற்குப் பாம்பெனப் பொருளுரைப்பினும் அமையும். (க)

## 2. ஐயம்

கண்ணுற்ற தலைமகன் இவள் யாவளோ என ஐயுறல்.

**ஆனே றடர்த்தெழில் நப்பின்னை தோள்மணந் தானுலகோ**
**வானே று வச்சிர வேந்துல கோபணி வாழுலகோ**
**மானே று கைம்மது ரைச்சொக்க நாதர் மணிவரைமேல்**
**தேனே றுருவத் திவணின்ற பெண்கொடி சேரிடமே.**

(இ - ள்.) கலைமான் பொருந்திய கையையுடைய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது அழகிய மலையின்மீது தேன்போலும் இனிமையைச் செய்யும் உருவத்துடன் இவ்விடத்து நின்ற பெண்கொடி உறையும் இடம், காளையை அடக்கி நப்பின்னையை மணந்த கண்ணனாகிய திருமாலின் திரு வைகுந்தமோ? விண்ணுலகில் உயர்ந்து விளங்கும் வச்சிரப் படையையுடைய வேந்தனாகிய இந்திரனின் உலகமோ? பாம்புகள் வாழும் நாக உலகமோ? (எ - று.)

(வி - ம்.) ஆனேறு - காளை; வச்சிர வேந்து - இந்திரன். (உ)

## 3. துணிவு

*தான்கண்ட பெண் மண்ணக மகளே எனத் தலைவன் துணிதல்.*

**இந்தார் நுதனித் திலமரும் பிக்கண் இமைத்தனதண்**
**பைந்தார் புலர்ந்தன சீறடி தோய்ந்தன பாரகத்து**
**நந்தார் வயல்மது ரைச்சொக்க நாதர் நளிவரைமேற்**
**கொந்தார் குழலி மடமா தணங்கல்லள் கொள்கநெஞ்சே.**

(இ - ள்.) நெஞ்சமே! பிறைத் திங்கள் போலும் நெற்றியின் கண் வெயர்வை முத்துக்கள் அரும்பப்பெற்றுக் கண்களும் இமைத்தன; குளிர்ச்சி பொருந்திய பசுமையான மாலைகள் வாடின; சிறிய பாதங்கள் நிலத்தின்கண் தோய்ந்தன. சங்குகள் நிறைந்த வயல்களையுடைய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது குளிர்ச்சி பொருந்திய மலையின்மீது நிற்கும் பூங்கொத்துக்கள் பொருந்திய கூந்தலையுடையளாகிய இவ் விளமங்கை தெய்வப் பெண்ணல்லள் (மண்ணக மகளே)! கண்டு கொள்க! (எ - று.)

(வி - ம்.) இந்து - பிறைமதி; நுதல் - நெற்றி; நித்திலம் - முத்து: வெயர்வையாகிய முத்து; தார் - மாலை; சீறடி - சிறுமை+அடி; பார் - நிலம்; நந்து - சங்கு; நளிர் - குளிர்; வரை - மலை; கொந்து - கொத்து. (ங)

## 4. குறிப்பறிதல்

*தலைமகன் தலைமகளின் பார்வையால் தன்னிடத்து அவட்கு வேட்கை உண்டென்பதைக் குறிப்பால் அறிதல்.*

**ஈரா றெறுழிப் பறழ்பா லருத்தி இனிதெடுத்து**
**நேரா று செல்லு மமைச்சாக்கி யாடல்செய் நித்தர்வைகைப்**
**பேரா றுசேர்மது ரைச்சொக்க நாதர் பெருங்கிரிவாய்**
**ஆரா வமுத மிவணோக்க மென்னுடை யாருயிர்க்கே.**

(இ - ள்.) பன்னிரு பன்றிக்குட்டிகளுக்குப் பாலூட்டி நலமுற அவற்றை வளர்த்து நேரிய வழியில் நடக்கும் மந்திரிகளாக

ஆக்கித் திருவிளையாடல் செய்த அழிவற்றவராகிய, வைகை என்னும் பெரிய ஆறு சூழுகின்ற மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானின் பெருமை வாய்ந்த மலையினிடத்தே இப் பெண்ணின் பார்வை என்னுடைய அரிய உயிருக்குத் தெவிட்டாத அமுதமாம், (எ - று.)

(வி - ம்.) ஈராறு - பன்னிரண்டு; எறுழி - காட்டுப் பன்றி; பறழ் - குட்டி; அருத்தி - ஊட்டி; எடுத்து - உயர்த்தி : வளர்த்து; ஆறு - வழி; நித்தர் - நிலையானவர் : அழிவற்றவர்; கிரி - மலை. (௪)

## 5. இரந்துபின்னிற்றற்கெண்ணல்

*தலைமகன் தலைமகளிடத்துக் குறையிரந்து இன்மொழி கூற நினைத்தல்.*

**உரப்பா லருணிறைந் தாரென் பதுங்கண் ணுணர்த்து மெதுங்**
**கரப்பா ரலரென் பதுங்கவின் காட்டுஞ்செங் கையிவர்பாற்**
**சிரப்பான் மதிமது ரைச்சொக்க நாதர் செழுஞ்சிலம்பின்**
**இரப்பான் புகினமக் கேருடைத் தாமென் றிணங்குதுமே.**

(இ - ள்.) மனத்தின்கண் அருள் நிரம்பப்பெற்றவர் என்பதனையும் கண்கள் உணர்த்துகின்றன ; எதனையும் மறைக்கின்ற கள்ளமுடையர் அல்லர் என்பதனையும் அழகு புலப்படுத்தும். தலையின்கண் திங்களை அணிந்திருக்கின்ற, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானின் வளமை வாய்ந்த மலையின்கண் செம்மையான கைகளையுடைய இம் மங்கையார்பால் இரக்கப்புகின், அதுவும் நமக்கு ஒரு சிறப்பாம் என்று கொண்டு அதற்கு ஒருப்படுவேம் (எ - று.)

(வி - ம்.) உரப்பால் - நெஞ்சில்; கரப்பார் - மறைப்பர்; சிரப்பால் - தலையில்; இரப்பான் - இரத்தற்கு.

*கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்(று)*
*இரப்புமோர் ஏஎ ருடைத்து*

என்னும் திருக்குறள் ஈண்டு நோக்கத்தக்கது. (௫)

## 6. இரந்து பின்னிலை நிற்றல்

*தலைமகன் தலைமகள்பாற் குறையிரந்து இன்மொழி கூறல்.*

**ஊசற் கயிற்றிற் சுழலுமென் னெஞ்சத்தி னூறியநின்**
**ஆசைக் கடலிலென் னருயிர் மூழ்க லறிந்துவைத்து**
**நேசற் கருண்மது ரைச்சொக்க நாதர் நெடுங்கிரியில்**
**நீசற் றிரங்கிலை யிதோநின் தண்ணளி நேரிழையே.**

(இ - ள்.) *அன்பருக்கு அருள் செய்யும் மதுரையின்கண் எழுந்தருளியிருக்கின்ற சொக்கர் பெருமானது உயரிய மலையிடத்துச் செவ்விய அணிகளை அணிந்துள்ள மாதே! ஊசற் கயிறுபோல் சுழலுகின்ற என்னுடைய மனத்தகத்து ஊறிய நின்பாற்கொண்ட ஆசையாகிய கடலின்கண் எனது அரிய உயிர் முழுகுகின்றமையை அறிந்து வைத்தும், நீ சற்றும் இரக்கம் கொள்கின்றாயில்லை; இதுவோ நின் அருள்?* (எ - று.)

(வி - ம்.) *நேசன் - அன்பன் : ஆண்பாலிற் கூறினாரேனும் ஏனையவற்றுக்கும் பொருந்தும்; ஊசல் - ஊஞ்சல்; தண்ணளி - அருள்.* (சு)

## 7. முன்னிலையாக்கி மொழிதல்

*தலைமகன் தலைமகளை முன்னிலையாக்கிப் பேசுதல்.*

**என்னே சுனைபடி யீர்மலர் கொய்கிலி ரின்பமிக்க**
**நன்னேய ஆயமோ டாடலிர் யாது நயந்திலர்போல்**
**மின்னேர் சடைமது ரைச்சொக்க நாதர் மிளிர்சிலம்பிற்**
**பொன்னே ரெழிலணங் கீர்நின்ற வாறு புகலுமினே.**

(இ - ள்.) *மின்னலை யொத்த ஒளி வீசுகின்ற சடைமுடியையுடைய, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கின்ற சொக்கர் பெருமானது விளங்குகின்ற மலையிடத்துத் திருமகளைப் போலும் அழகுடைய மாதரீர்! சுனையின்கண் நீராடுகின்றிலீர்! மலர் கொய்கிலீர்! இன்பம் மிகுந்த நல்ல அன்புடைய பாங்கியர் கூட்டத்தொடு விளையாடுகின்றிலீர்! எதனையும் விரும்பாதவர் போல நின்றவாறு என்னை? கூறுமின்!* (எ - று.)

(வி - ம்.) சுனை - மலையகத்து நீர்நிலை; படிதல் - குளித்தல்; ஆயம்- கூட்டம் : தோழியர் கூட்டம்; நயப்பு - விருப்பம்; மிளிர் - விளங்கும்; சிலம்பில் - மலையின்கண். (எ)

## 8. மெய்தொட்டுப் பயிறல்

*தலைவன் தலைவி மெய்யினைத் தீண்டி நெருங்குதல்.*

**ஏதா மிடைக்கீ றெனவுண ரீரிவ் விளஞ்சிறுமான்**
**மாதா றுகாலொன் றுஞ் சென்னியின் மீக்கொள வன்மையளோ**
**மீதாறு சேர்மது ரைச்சொக்க நாதர் விலங்கலிடைப்**
**போதார் மதுகரங் காள்மறந் தீர்பிறர் புன்கணையே.**

(இ - ள்.) தலையின்மீது ஆறு பொருந்திய, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானின் மலையிடத்து மலர்களிற் பொருந்தியுள்ள வண்டுகாள்! மற்றையார் துன்பத்தை உணர மறந்தீர். இந்த இளமையான சிறிய மான்போலும் மாது ஆறு காலையுடைய வண்டுகளாகிய உங்களைச் சுமக்க ஆற்றலுடையளோ? இடைக்கு யாது முடிவு நேரும் என உணருகின்றிலீர்! (எ - று.)

(வி - ம்.) ஈறு - முடிவு; ஆறுகால் – வண்டு; சென்னி - தலை; மீ - மேலே. விலங்கல் - மலை; போது - மலரும் பருவத்து அரும்பு; மதுகரம் - வண்டு; புன்கண் – துன்பம். (அ)

## 9. முறுவற் குறிப்புணர்தல்

*தலைவி முகத்தே சிறுநகை தோற்றினாளாகத் தலைமகன் அம் முறுவலின் குறிப்பை உணர்தல்.*

**ஐயம்பு கொண்டவன் போர்க்கோடை நீத்தென் அகங்குளிரப்**
**பெய்யம் புதத்தின்முற் றோன்றுமின் போன்று பிறங்கியதால்**
**வையம் புகழ்மது ரைச்சொக்க நாதர் மலயவெற்பிற்**
**செய்யம் புயமன்ன கையாள்வெண் மூரற் சிறுநகையே.**

(இ – ள்.) உலகம் புகழ்கின்ற, மதுரையின்கண் எழுந் தருளியுள்ள சொக்கர்பெருமானது பொதியமலையின்கண், செந் தாமரை மலர்போலும் கையையுடையாளது வெள்ளிய பற்கள் தோன்றச் செய்யும் புன்சிரிப்பு காமன் செய்யும் போரான் உண்டா

கும் வெப்பத்தைப் போக்கி என் உள்ளங் குளிருமாறு பெய்யும் மழையின்முன் தோன்றுகின்ற மின்னலைப் போன்று விளங்கியது (எ - று.)

(வி - ம்.) ஐ அம்பு கொண்டவன் - தாமரை முதலிய ஐந்து பூக்களை அம்பாகக் கொண்ட காமன்; நீத்து - போக்கி; அம்புதம் - முகில்; பிறங்கியது - விளங்கியது; அம்புயம் - தாமரை; மூரல் - பல். (௯)

## 10. புணர்ச்சியின் மகிழ்தல்

*தலைவன் புணர்ச்சியினால் மகிழ்தல்.*

**ஒத்தவின் பத்துயி ரொன்ரு யியைந்தமு தூறியுள்கித்**
**தித்தலி னந்தமில் பேரின்ப மீதே சிறந்ததென்பேன்**
**தொத்தலர் காமது ரைச்சொக்க நாதர் சுரும்பகத்தே**
**முத்தன மூரற் குறுநகை யாரின் முயக்கமதே.**

(இ - ள்.) பூங்கொத்துக்கள் மலர்கின்ற சோலையையுடைய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானின் மலையினிடத்து, முத்துப் போலும் பற்கள் தோன்றச் செய்யும் புன்சிரிப்புடையார்தம் புணர்ச்சி, பொருந்திய மகிழ்ச்சியொடு உயிர் ஒன்றுபட்டு அமுதம் ஊறி இன்புறுத்துதலினால் முடிவற்ற பேரின்பமாவது இதுவே! சிறப்புடையது இதுவே என்பேன், (எ - று.)

(வி - ம்.) தொத்து - கொத்து : பூங்கொத்து; கா - சோலை; சுரும்பு - மலை; முயக்கம் - புணர்ச்சி. (௧0)

## 11. ஊழ்ச் சிறப்புரைத்தல்

*தலைமகளைத் தன்பால் கூட்டுவித்த தன் ஊழ்வினையின் சிறப்பைக் கூறுதல்.*

**ஓங்குந் தமிழ்மது ரைச்சொக்க நாத ருயர்வரைமேல்**
**தாங்கும் புயற்குழற் றையலிம் மானைச் சரோருகத்தின்**
**நீங்குந் திருவை நிகரற்ற இன்பினை நீணிலத்தில்**
**தேங்கு மமிழ்தையெற் கிந்ததெய் வத்திறன் சேர்த்ததுவே.**

(இ - ள்.) உயர்ந்து வளரும் தமிழ் விளங்கும் மதுரையின் கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது உயர்ந்த மலையின்

மீது முகில் போலும் கூந்தலைத் தாங்கியுள்ள இள மங்கையாகிய இம் மான்போன்றவளை, தாமரை மலரின் நீங்கிய திருமகளை யொத்தவளை, ஒப்பற்ற இன்ப வடிவானவளை, பெரிய மண்ணுலகத்தே தங்கியுள்ள அமிழ்தம் போன்றவளை எனக்கு அளித்த ஊழ்வினையின் திறம் சிறப்புடைத்து, (எ - று.)

(**வி - ம்.**) புயல் - முகில்; சரோருகம் - தாமரை; எற்கு—எனக்கு; தெய்வம் — ஊழ்வினை. (கக)

## 12. அணிகுலைய நாணியதுணர்ந்து தெளிவித்தல்

புணர்ச்சியான் தலைமகளின் அணிகள் குலைந்தமையின் அவள் நாணமுற்றுளாக அஃது உணர்ந்து தலைமகன் அவளைத் தெளிவித்தல்.

**ஔவிய நீத்தநன் னெஞ்சணங் கேநின தாகமெல்லாம்**
**செவ்விய லாமணி முன்போ லணிந்தனன் சிந்தைநையேல்**
**திவ்விய மாமது ரைச்சொக்க நாதர் திகழ்பொருப்பில்**
**எவ்விய லானுநிற் கண்டையு ரார்நின் இகுளையரே.**

(**இ - ள்.**) சிறந்த பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது விளங்குகின்ற மலையினிடத்தே, அழுக்காறற்ற நல்ல மனத்தையுடைய மாதே! நின் உடலிலெல்லாம் செம்மையான இயல்பினவாகிய அணிகளை முன்பு போலவே அணிந்துவிட்டனன். எவ்வாற்றானும் நின் தோழியர் கண்டு ஐயப்படார்; நாணத்தால் மனம் வருந்தற்க! (எ - று.)

(**வி - ம்.**) ஔவியம் - அழுக்காறு; ஆகம் - உடல்; திவ்விய - சிறந்த; பொருப்பு - மலை; இகுளையர் - தோழியர்.

மனம் நைதற்குக் கரணியம் நாணம் என்பது கிளவிப் பெயராற் பெற்றாம். (கஉ)

## 13. இடமணித்தென்றல்

தலைமகன் ஊர் தொலைவில் உள்ளதோ அண்மையில் உள்ளதோ என்று தலைமகள் கவலைப்படுவதனைக் குறிப்பினால் அறிந்த தலைமகன் தன் ஊர் அண்மையில் உள்ளது என்று கூறுதல்.

**கண்டன்ன சொற்றிரு வேநுங் குறிஞ்சியிற் கள்ளருந்து**
**வண்டென் னரும்பதி வாவியம் போருகம் வந்துறங்கல்**

**உண்டென்ன வென்மது ரைச்சொக்க நாதர்வெற் பொண்மயிலே**
**அண்டென்ன தூர்நின் சிறுகுடிக் கண்மை யறிகுவையே.**

**(இ - ள்.)** மதுரையில் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையிடத்து ஒளி பொருந்திய மயில் போன்றவளே! கற்கண்டு போலும் இனிய சொற்களையுடைய திருமகளை யொத்தவளே! யான் தங்கும் எனது ஊர் நின் சிறுகுடிக்கு அண்மையதே என்று அறிவாய்! நும் குறிஞ்சியிடத்தே தேனுண்ணும் வண்டு என்னுடைய அருமை வாய்ந்த ஊரினகத்துக் குளத்தின்கண்ணதான தாமரை மலரில் வந்து உறங்குதல் உண்டு எனின் நீ கவலையுறுவது என்னை?

**(வி - ம்.)** கண்டு - கற்கண்டு; வாவி - குளம்; அம்போருகம் - தாமரை; அண்டுதல் - தங்குதல்.

ஆயத்தாரையும் உட்படுத்தி நும் என்றான். (கங)

## 14. தலைவன் பிரிந்து வருவேனென்றல்

தலைவன் தலைவியைப் பிரிந்து மீண்டுவருவேன் என்று கூறுதல்.

**காந்தளந் தண்குறிஞ் சித்தேன் பருகிக் களிவண்டுபோய்**
**மாந்துளங் கொண்டு வராமையுண் டேநின்கண் வைத்தநெஞ்சாற்**
**பாந்தளம் பூண்மது ரைச்சொக்க நாதர் பருவரைமேல்**
**ஏந்திளங் கொங்கைநல் லாய்பிரிந் தேகணத் தெய்துவனே.**

**(இ - ள்.)** பாம்பை அழகிய அணிகலனாக அணிகின்ற மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது பெரிய மலையிடத்து இறுமாந்திருக்கும் இளமை பொருந்திய முலைகளையுடைய மாதே, குளிர்ச்சி பொருந்திய குறிஞ்சியில் அழகிய காந்தள் மலரினிடத்தேயுள்ள தேனை உண்டு களிப்புற்ற வண்டு அவ்விடத்தினின்று சென்று அத் தேனை உண்ணும் விருப்பொடு மீண்டும் வராமை உண்டோ! யான் நின்னைப் பிரிந்து நின்பால் வைத்த மனவிருப்பால் சிறுபொழுதில் மீள்வேன் (எ - று.)

(வி - ம்.) மாந்துதல் - உட்கொள்ளுதல்; பாந்தள்-பாம்பு; அம்-அழகிய; பூண் - அணிகலன். (கச)

## 15. தலைவன் பிரிவுநினைந்து தலைவி யிரங்கல்

*தலைவன் தன்னை விட்டுப் பிரிதலை நினைந்து தலைவி வருந்துதல்.*

**கிஞ்சுக வாயமிழ் துண்டெனக் கின்சொற் கிளந்துகொஞ்சும்**
**அஞ்சுக மேநினை யோர்கண மேனு மகலுகிலேன்**
**நஞ்சுகந் துண்டருள் நம்மது ரைச்சொக்க நாதர்வெற்பில்**
**நெஞ்சுகந் தேயுறை யென்றூர் பிரிய நினைந்தனரே.**

(இ - ள்.) நஞ்சை விரும்பி உண்டு அருள் செய்கின்ற, நமது மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையிடத்து, முருக்க மலர் போலும் சிவந்த வாயகத்து அமுதம் உண்டு, எனக்கு இன்மொழி கூறி, 'கொஞ்சுகின்ற கிளியே! உன்னை ஒரு சிறுபொழுதும் அகலமாட்டேன், மனமகிழ்ந்து இருப்பாயாக' என்றவர் பிரிய நினைந்தனரே!

(வி - ம்.) கிஞ்சுகம் - முருக்கமலர்; கிளந்து - கூறி; அஞ்சுகம் - அழகிய கிளி; உகந்து - மகிழ்ந்து. (கரு)

## 16. ஆயத்துய்த்தல்

*தலைவன் தலைவியை அவளுடைய தோழியர் கூட்டத்தின்கண் செலுத்துதல்.*

**கீதங் கமழுங் குயின்மொழி யாய்இக் கிளர்புனத்தே**
**நீதங் கிடாதுன் னுயிர்ப்பாங்கி யோடுநன் னேயமிக்க**
**மாதங்க மாமது ரைச்சொக்க நாதர் வரையகத்தே**
**ஆதங்க மின்றிநின் ஆயத் துடன்விளை யாடுகவே.**

(இ – ள்.) யானைகளையுடைய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர் பெருமானது மலையின்கண் இசைமணங் கமழுகின்ற குயிலினது மொழி போலும் இனிய மொழியையுடையாய்! விளங்குகின்ற இச் சோலையிடத்தே நீ தங்கிவிடாது உன் உயிர்த் தோழியோடும் உன் மற்றைத் தோழியரோடும் நல்லன்பிற் சிறந்த உடன்கூட்டத்தாரோடும் துன்பமின்றி விளையாடுக! (எ - று.)

**(வி - ம்.)** கீதம் - இசை; கிளர்தல் - விளங்குதல்; புனம் - சோலை; மாதங்கம் - யானை; மாது அங்கம் எனப் பிரித்து, உமையை இடப்பாகத்துடைய சொக்கநாதர் எனக் கூறினும் அமையும்; ஆதங்கம் - துன்பம். (கசு)

## 17. தலைவன் பாங்கனைச் சார்தல்

*தலைவிபிரியப்பெற்ற தலைவன் அதனால் மனம் நொந்து, அந் நோயைத் திர்க்கவல்லான் பாங்கனே என்றெண்ணி அவனிடத்துச் செல்லுதல்.*

**குஞ்சரங் காத்தவன் கண்மலர் சாத்துங் குளிர்ந்தலர்ந்த**
**செஞ்சரண் சேர்மது ரைச்சொக்க நாதர் சிலம்பினில்வேள்**
**வெஞ்சரம் பாய்புண்ணை யாற்றும் மருத்துவன் மெய்யன்பினென்**
**விஞ்சர ணன்னவொர் பாங்கனுண் டாலுள்ளம் விள்ளுதற்கே.**

**(இ - ள்)** *யானையைக் காப்பாற்றிய திருமால் தன் கண்ணாகிய மலரை அணிவித்த திருவடிகளையுடைய, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையிடத்தே, என் உள்ளக்கிடக்கையை உரைப்பதற்குக் காமனின் வெப்பம் பொருந்திய அம்புகள் பாய்ந்த புண்ணை ஆற்றவல்ல மருத்துவனும், மெய்யன்புடையானும், மேலான காவலிடம் போன்றவனுமான பாங்கன் ஒருவன் இருக்கின்றான்* (எ - று.)

**(வி - ம்.)** குஞ்சரம் - யானை (கயேந்திரன்); சரண் - திருவடி; வேள் - காமன்; சரம் - அம்பு; விஞ்சு அரண் - மேலான காவல்; விள்ளுதற்கு - கூறுதற்கு.

கயேந்திரன் என்னும் யானையைத் திருமால் காப்பாற்றினார் என்பது திருமாலிய (வைணவ)த்துத் தொன்மக்கதை. திருமால் சிவ வழிபாடாற்றுங்கால் ஒருநாள் 1008 தாமரை மலர்களுள் ஒன்று குறைந்தமையின் தம் கண்ணையே மலராக இடந்து சிவபெருமான் திருவடிகளில் வைத்ததனை ஆசிரியர் இப் பாடற்கண் குறிப்பிட்டுள்ளார். (கஎ)

## 18. பாங்கன் தலைவனை யுற்றது வினாதல்

*பாங்கன் வாட்டமுற்றிருக்கும் தலைவனை நோக்கி இந் நிலைமைக்குக் காரணம் என்னை என்று வினவுதல்.*

**கூர்வேற் குமரனை யொத்தமன் னாவிக் குவலயத்துன்**
**போர்வேற் பகைவரை மாறடு கொற்றப் புயமலைகள்**

**சீர்வே லணிமது ரைச்சொக்க நாதர் திருவரையில்**
**சூர்வேறு தீண்டிய போலொளி தேய்ந்து சுருங்கலென்னே.**

**(இ - ள்.)** கூரிய வேற்படையையுடைய முருகக்கடவுளை யொத்த அரசனே! போர் செய்யும் வேற்படையையுடைய பகைவர்களை அவர்தம் பகைமை கெடுத்து வெற்றியை விளக்கும் நின் மலைபோன்ற தோள்கள், சிறப்புப்பொருந்திய சூலப்படையையுடைய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையிடத்துக் கானுறை தெய்வத்தினால் தீண்டப்பட்டவாறு போல வேருகத் தேய்வுற்றுச் சுருங்குதல் என்னை, (எ - று.)

**(வி - ரை.)** குவலயம் - உலகம்; மாறுஅடு கொற்றம் – பகைமையை அழித்து விளக்கும் வெற்றி; புயம் - தோள்; சூர் - கானுறை தெய்வம்.
(கஅ)

## 19. தலைவன் உற்றதுரைத்தல்

தலைவன் பாங்கனிடத்துத் தனக்குற்ற வேறுபாட்டிற்குரிய காரணத்தைக் கூறல்.

**கெண்டையங் கண்கள்கொண் டென்னுள்ள மீனங் கெடுத்தருந்தித்**
**தொண்டையம் வாய்ப்புன் முறுவல் நிலவிலென் றென்மதியுண்**
**டிண்டையிந் தார்மது ரைச்சொக்க நாத ரெழில்வரைவாழ்**
**ஒண்டைய லாள்தன வெற்பென் புயவெற் புடைத்தனவே,**

**(இ - ள்.)** இண்டை மாலையும், திங்களும் பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது மலையகத்து வாழும் ஒளி பொருந்திய நங்கை, கெண்டை மீன் போலும் கண்களைக் கொண்டு என் உள்ளமாகிய மீனைக் கொன்று விழுங்கித் தொண்டைக்கனி போலும் வாயிடத்துப் புன்முறுவலாகிய மதியொளியால் என் இயற்கையான அறிவை உட்கொண்டனள்; அவளுடைய கொங்கைகளாகிய மலைகள் என்னுடைய தோள்களாகிய மலைகளை உடைத்தன (எ - று.)

**(வி - ரை.)** தொண்டை - தொண்டைக் கனி; மதி-திங்கள், அறிவு; இண்டை - தலைமாலை; தனம் - கொங்கை; வெற்பு – மலை.

மீன் போல்வன மீனை விழுங்கின எனவும், மதியொளி என் மதியை உட்கொண்டது எனவும் அணிநயம்படச் சொற்கள் புனையப் பட்டுள்ளமை கண்டு இன்புறுக!

உண்டு என்னும் எச்சம் உண்டாள் என முற்றுப் பொருள் பயந்தது. (கக)

## 20. பாங்கன் தலைவனைப் பழித்தல்

தனக்கு ஏற்பட்ட வாட்டம் பெண்ணினால் ஆகியது என்று தலைவன் கூறியது கேட்ட பாங்கன் தலைவனைப் பழித்துரைத்தல்.

**கேசரி யோபிடி யாற்பிணிப் புண்டிடுங் கேழுழுவை**
**யோசிறு மானுக் குடைந்திடு மீளிநின் னொண்மதியோ**
**மாசறு சீர்மது ரைச்சொக்க நாதர் வரைமயிலாப்**
**பேசுறு பேதை குழற்கா ரிருட்குப் பெயர்வதுவே.**

(இ - ள்.) பெருமையிற் சிறந்தோய்! அரிமாவோ பெண் யானையினால் கட்டுண்ணும்? சிறப்பு வாய்ந்த புலியோ சிறிய மானுக்குத் தோல்வியுறும்? ஒளி பொருந்திய நின் மதியோ குற்ற மற்ற சிறப்புடைய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது மலையின்கண் வாழும் மயில் என்று சிறப்பித்துப் பேசப்பெறும் பேதைமை வாய்ந்த பெண்ணின் கூந்தலாகிய கரிய இருளுக்குப் புறங்காட்டிச் செல்வது? (எ - று.)

(வி - ம்.) கேசரி - அரிமா; பிடி – பெண் யானை; உழுவை - புலி; மீளி - பெருமையிற் சிறந்தோன்; பெயர்தல் - பின் வாங்கிச் செல்லு தல் : புறங்காட்டிச் செல்லல். (உ0)

## 21. தலைவன் பாங்கனை முனிதல்

தன்னைப் பழித்த பாங்கனைத் தலைவன் மறுத்துரைத்தல்.

**கையா வமிழ்த மனையாளைக் கண்டுளங் காதல்கொண்டு**
**நையா வருந்து மெனையஞ்ச லென்று நலம்புகலாய்**
**செய்யா வளமது ரைச்சொக்க நாதர் சிலம்பினில்நின்**
**மெய்யா விழுப்புணில் வேலெறிந் தாங்கு விளம்பினையே.**

**(இ - ள்.)** தான் தோன்றியாகிய, வளமையையுடைய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையின்கண்ணே திண்ணிய உடலையுடையாய்! வெறுக்கப்படாத அமிழ்தம் போன்றவளைக் கண்டு காதல் கொண்டு, மனம் நைந்து வருந்துகின்ற என்னை, 'அஞ்சற்க!' என்று நன்மொழி கூறுது பெரும் புண்ணில் வேலை எறிந்தது போலப் பழித்துரைக்கின்றனையே! (எ - று-)

**(வி - ம்.)** கையா – வெறுக்கப்படாத : தெவிட்டாத; நையா - நைந்து : செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; செய்யா - கையினுற் செய்யப்படாத; விழுப்புண் – வீரத்திற்கடையாளமாக நெற்றியினும் மார்பினும் உண்டாம் பெரும்புண். (உக)

## 22. இயலிடம் வினுதல்

பாங்கன் தலைவனிடத்து அப் பெண் எவ் வியல்பினள் எவ் விடத்தினள் என்று வினவுதல்.

**கொற்றத் தனிச்சிலை யாய்நின் னுளத்தினைக் கொள்ளைகொண்ட**
**கற்றைக் குழற்சிறு மானுக் கிடம்பாற் கடல்மலரோ**
**நெற்றிக்க ணர்மது ரைச்சொக்க நாதர் நெடுங்கிரியோ**
**மற்றெத் தகைத்தோ இயலிறை வாபுகல் வாயெனக்கே.**

**(இ - ள்.)** இறைவா! வெற்றியை விளக்கும் ஒப்பற்ற வில்லையுடையாய்! நின்னுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்ட தொகுதியான கூந்தலையுடைய சிறிய மான் போன்ற நங்கைக்குரிய இடம் திருப்பாற் கடலோ? தாமரைமலரோ? நெற்றிக்கண்ணை யுடையவரான, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர் பெருமானது உயர்ந்த மலையோ? அவள் இயல்பு எத் தன்மையதோ? எனக்குக் கூறுவாயாக! (எ - று.)

**(வி - ம்.)** கொற்றம்-வெற்றி; தனி-ஒப்பற்ற; கற்றை-தொகுதி; இறைவா - தலைவ.

சிலை என்பதனைப் புருவவில் எனக்கொண்டு கற்றைக்குழலைச் சிறுமானுக்கு ஏற்றினும் அமையும். (உஉ)

## 23. இவ்விய லிவ்விட மென்றல்

*தலைவன் தான் கண்ட பெண் இத் தன்மையள் இவ் விடத்தினள் என்று பாங்கனிடம் கூறுதல்.*

**கோடாத வுள்ளத்தெ னண்பா முகமதி கூந்தல்விசும்**
**போடாத மேகம் விழியோ கயல்கள் உருவமிழ்தம்**
**வாடாத தார்மது ரைச்சொக்க நாதர் வளர்பொருப்பில்**
**தேடா தகப்பட்ட செல்வமன் னுட்கிடந் தேம்பொழிலே.**

**(இ - ள்.)** *மாறுபாடற்ற மனத்தையுடைய நண்பனே! வாடுதல் இல்லாத மாலையையுடைய, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது உயர்ந்த மலையிடத்துத் தேடாது கிட்டிய செல்வத்தைப் போன்ற தலைமகளுக்கு முகம் திங்கள்; கூந்தல் வானத்தின்கண் ஓடாத முகில்; விழிகளோ மீன்கள்; உருவம் அமிழ்தம்; இடமோ இனிய பொழில்* (எ-று.)

**(வி - ரை.)** *கோடாத - மாறுபாடற்ற; விசும்பு - வானம்; தார் - மாலை.* (உக)

## 24. பாங்கன் இறைவனைத் தேற்றல்

*பாங்கன் தலைவனை நோக்கி, 'நீ வருந்தற்க; யான் சென்று தலைவியைக் கண்டு வருகின்றேன்' எனத் தேற்றுதல்.*

**கௌவையில் லாதமன் னுநினைக் கண்வலைக் கட்படுத்த**
**அவ்விய லாளையின் னேசென்று கண்டுனை யண்ணும்வரை**
**நவ்வியொர் பாகத்தர் மாமது ரைச்சொக்க நாதர்வெற்பிற்**
**செவ்விய வுள்ளந் தெளிந்தே யுறைதி திகைப்பொழிந்தே.**

**(இ - ள்.)** *புகழ் வாய்ந்த மன்னனே! மான்போலும் மங்கையைத் தன் உடலின் ஒரு பாகத்தே கொண்டவராகிய, பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையிடத்தே, நின்னைக் கண்ணுகிய வலையின்கட் சிக்குவித்த அத் தன்மையளை இப்பொழுதே யான் சென்று கண்டு மீண்டு வரும் அளவும் செம்மையான உள்ளத்தின்கண் மயக்கமின்றித் தெளிந்து இருப்பாயாக!* (எ - று.)

(வி - ம்.) கௌவையில்லாத-பழிச் சொல்லற்ற : புகழையுடைய; அன்னுதல் - வந்து சேருதல்; நவ்வி - மான்; திகைப்பு - மயக்கம். (உச)

## 25. பாங்கன் தலைவியைக் காண்டல்

*தலைவன் சொன்ன இடத்துப் பாங்கன் சென்று தலைமகளைக் காணுதல்.*

**சந்தங் கமழுந் தடங்காவு மீதே தரைக்கிறையைக்**
**கந்தங் கமழ்குழ லாற்பிணித் தாளுமிக் காரிகையே**
**பந்தந் தவிர்மது ரைச்சொக்க நாதர் பசும்பொன்வெற்பில்**
**நந்தம் முயிர்தள ராதுகண் டோமிங்கு நல்நெஞ்சமே.**

(இ - ள்.) நல்ல நெஞ்சமே! மலப்பிணிப்பை நீக்குகின்ற, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது வள மிக்க அழகிய மலையின்கண் சந்தன மணங்கமழும் பெரிய சோலை யும் இதுவே; மண்ணுளும் மன்னனுகிய தலைமகனை மணங்கமழுங் கூந்தலாற் பிணித்தவளும் இம் மங்கையே! நம் உயிர் சோர்வுறு வண்ணம் தலைமகளை இங்குக் கண்டோம் (எ - று.)

(வி - ம்.) சந்தம் - சந்தனம்; கந்தம் - மணம்; பந்தம் – தளை; பசுமை - வளமை; பொன் - அழகிய; தளர்தல் - சோர்தல். (உரு)

## 26. இகழ்ந்ததற்கு இரங்கல்

*தலைவியின் பேரழகைக் கண்ட பாங்கன், காணு முன்னம் எம் பெருமானை அறிவின்றி இகழ்ந்தேன் என்று இரங்கிக் கூறுதல்.*

**சாத்திரங் கற்றுச் சகமே வெறுத்த தவத்தினரும்**
**கேத்திரஞ் சூழ்மது ரைச்சொக்க நாதர் கிரியிலிம்மான்**
**நேத்திரத் தாற்பிணிப் பெய்துவ ரேயிவள் நேர்நகிலாம்**
**ஏத்திரத் தானெந்த வேந்தையெண் ணுதென் இகழ்ந்தனனே.**

(இ - ள்.) நெஞ்சமே! மெய்ந் நூல் கற்று உலகை வெறுத்த தவ முனிவர்களும், திருக்கோயில்கள் சூழ்ந்துள்ள மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலை யத்து இம் மான் போல்வாளுடைய கண்ணினுல் பிணிக்கப் படுவர்.

இங்ஙனமாக, இவளுடைய செவ்விய கொங்கைகளாகிய ஏந்திரத்தில் நொந்த பெருமானை, எண்ணிப்பாராது என்னே யான் இகழ்ந்தனன் (எ - று.)

**(வி - ம்.)** சாத்திரம் - நூல் : மெய்ந்நூல்; சகம் - உலகம்; சேத்திரம் - திருக்கோயில்; நேத்திரம் - கண்; நகில் - கொங்கை; ஏத்திரம் - ஏந்திரம்; வேந்து — பேரரசன் : தலைமகன்.

நகிலாகிய எந்திரம் மனமாகிய கரும்பை நைத்தலால் நொந்த வேந்தை என்க! (உசு)

## 27. பாங்கன் தலைவனை வியத்தல்

*தலைவியின் அழகால் மயக்கப்பெற்ற தலைவன் அத் தடையை மீறித் தம்மிடத்து வந்தது சிறப்பென்று பாங்கன் வியந்துரைத்தல்.*

**சிலைவேளுங் கண்டு திகைக்கு நற்பேரெழிற் சீருடன்மூ**
**விலைவேலர் மாமது ரைச்சொக்க நாதர் வியன்கிரிவாழ்**
**அலைவேலை யங்கணிப் பெண்ணு ரமுதி னழகெனுநீர்**
**நிலைவேலை நீந்திவந் தான்வீர னெம்மிறை நீணிலத்தே.**

**(இ - ள்.)** நெஞ்சமே! முத்தலைச் சூலப்படையையுடைய, பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது பெரிய மலையின்கண் வாழுகின்ற, வேற்படையை வருத்தும் அழகிய கண்களையுடைய காமவேளுங் கண்டு மயங்கும்படியான எழில் நலம் மிக்க சிறப்பினையுடைய பெண்ணாகிய அரிய அமிழ்தத்தின் அழகெனும் கடலை நீந்தி வந்தவனாகிய எம் தலைவன் இப் பேருலகின்கண் வீரனேயாவன் (எ - று.)

**(வி - ம்.)** சிலைவேள் - வில்லையுடைய வேள் : காமன்; மூவிலை வேல் - சூலப்படை; வேலை - கடல்.

*அலை வேலை அங்கண் என்பதை வேலை அலை அங்கண் என மாறுக!* (உஎ)

## 28. பாங்கன் தலைவியை வியத்தல்

*பாங்கன் தலைவியின் ஆற்றலைக் கண்டு வியத்தல்.*

**சீர்தங்கு கற்பக நாட்டிறை வன்பழி தீர்த்தருளிப்**
**பேர்தங்கு மாமது ரைச்சொக்க நாதர் பிறங்கலிடை**

**ஏர்தங்கு மாமயில் போல்வார்நங் கோன்வே ளிரும்பிணிக்கு**
**வார்தங்கு பூண்வரை யாலருள் வார்நல்ல மாமருந்தே.**

(இ - ள்.) *நெஞ்சமே! சிறப்புப் பொருந்திய கற்பக நாட்டு வேந்தனை இந்திரனுக்குற்ற பழியைத் தீர்த்தருளிப் பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர் பெருமானது மலையகத்து அழகு பொருந்திய சிறந்த மயில் போல் வாராகிய இம் மங்கையார், நம் தலைவனுக்குக் காமனால் நேர்ந்துள்ள இப் பெரும் பிணிக்குக் கச்சுப் பொருந்திய அணிகளை அணிந்துள்ள கொங்கையால் நல்ல சிறப்பு வாய்ந்த மருந்தினை அளித் தருளுவார்* (எ - று.)

(வி - ம்.) *கற்பக நாட்டு இறைவன் – இந்திரன்; பேர் - பெருமை; பிறங்கல் - மலை; வேள் - காமன்; இரும் - பெரிய; வார் - கச்சு; பூண் - அணிகலன்; வரை - மலை : கொங்கை (ஆகுபெயர்).*

*இந்திரன் பழிதீர்த்தமையைத் திருவிளையாடற் புராணத்தில் கண்டு கொள்க! இப் பாடல் வியத்தலாவது யாங்ஙனமெனின் தலைவனுற்ற பெரும் பிணியையும் தீர்க்க வல்லாள் என்றமையின் என்க!* (உஅ)

### 29. பாங்கன் தலைவனுக்குத் தலைவியிடங் கூறல்

*பாங்கன் தலைவி குறியிடத்துத் தனித்து நிற்கின்ற நிலையைக் கண்டு வந்து தலைவற்குக் கூறல்.*

**சுடரா தவஞ்செல வொல்லாத சோலையிற் றேய்ந்தகன்ற**
**கடவா ரணத்தினை யுன்னிவை வேற்றடங் கண்பரப்பி**
**நடவா ரணப்பரி யார்மது ரைச்சொக்க நாதர்வெற்பில்**
**மடவா ரணப்பிடி நிற்பது கண்டனென் மன்னவனே.**

(இ - ள்.) *மன்னவனே! நடக்கும் மறையாகிய குதிரையை யுடையராகிய, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர் பெருமானது மலையின்கண் ஒளி வீசுகின்ற கதிரவனும் நுழைய முடியாத சோலையினிடத்தே தன்னைக் கூடிப் பிரிந்த மதக்களிற்றை நினைத்து, கூரிய வேல்போலும் அகன்ற கண் பார்வையைப் பரவச் செய்து இளம் பெண்யானை நிற்பதைக் கண்டேன்* (எ - று.)

(வி - ம்.) ஆதவம் - கதிரவன்; ஒல்லாத - முடியாத; தோய்ந்து - கூடி; கடம் - மதநீர்; வாரணம் - யானை; உன்னி - நினைத்து; வை - கூர்மை; நடவாரணம் - நடக்கும் குதிரை: மறை (வேதம்); மடம் - இளமை; பிடி - பெண்யானை. (உகூ)

## 30. தலைவன் குறிவழிச்சேறல்

பாங்கன் சொற்படி தலைவன் குறியிடத்துச் செல்லுதல்.

**சூதொன்று கொங்கையைத் துய்ப்பா னவளுறை சூழல்செல்லப்**
**பாதங்கள் பெற்றுப் பிறந்தன மேயன்றிப் பாரிலுளோர்**
**ஏதங்கள் நீர்மது ரைச்சொக்க நாதர் எழிலிவெற்பின்**
**மீதொன்று வான்சிறை பெற்றில மேவல்லை மேவுதற்கே.**

(இ - ள்.) நெஞ்சமே! சூதாடு கருவியைப் போலும் முலைகளைத் துய்க்கும்பொருட்டு, உலகிலுள்ளார் குற்றங்களைப் போக்கும் மதுரையின்கண் எழுந்தருளியிருக்கின்ற சொக்கர்பெருமானுடைய, முகில் மேலே வந்து பொருந்துகின்ற மலையகத்து அத் தலைமகள் தங்கும் இடத்திற்குச் செல்லக் கால்களைப் பெற்றுப் பிறந்திருக்கின்றோமே யல்லாது, விரைந்து செல்லுதற்குச் சிறந்த சிறகுகளைப் பெற்றோமில்லையே! (எ - று.)

(வி - ம்.) சூது - சூதாடு கருவி : வல்; ஏதம் - குற்றம்; எழிலி - முகில்; வான் - சிறந்த; வல்லை - விரைவாக; மேவுதற்கு - சென்றடைதற்கு. (௩௦)

## 31. தலைவன் தலைவியைக் காண்டல்

குறியிடத்துத் தலைவன் தலைவியைக் காணுதல்.

**செவ்வா யமிழ்தும் திகழ்முத்த மூரலும் தீங்கரும்பும்**
**ஒவ்வா மொழியு முயர்மயிற் சாயலும் உற்றமின்னாள்**
**தெவ்வா னஇன்மது ரைச்சொக்க நாதர் செழுஞ்சிலம்பின்**
**இவ்வா யிருந்தன ளோர்தனி யானுயிர் எய்திடவே.**

(இ - ள்.) நெஞ்சமே! சிவந்த வாயகத்து அமிழ்தும், விளங்குகின்ற முத்துப் போலும் புன்முறுவலும், கரும்பும் இணையாக மாட்டாத இனிய சொல்லும், சிறந்த மயில்போலும் சாயலும்

உடைய மின்னற் கொடியை யொத்த தலைமகள், யான் உயிர் பெறு மாறு வானுலகத்திற்குப் பகையான மதுரையின்கண் எழுந்தருளி யிருக்கும் சொக்கர்பெருமானது வளம்பொருந்திய மலையின்கண் இவ்விடத்தே யொருதனியே இருந்தனள் (எ - று.)

(வி - ம்.) தெவ் - பகை; இவ்வாய் - இவ்விடத்தே. வானதின் தெவ் மதுரை என்று கூட்டுக!

தெவ்வானது இல் எனக் கொண்டு, பகை சிறிதும் இல்லாத எனப் பொருள் கொள்ளினும் ஆம். (௩௧)

## 32. தலைவன் கலவியின் மகிழ்தல்

*தலைமகன் தலைமகளொடு புணர்ச்சியின் மகிழ்தல்.*

**சேணு ரமிழ்துண்ட தேவரும் என்னிற் சிறந்திலரே**
**பூணுர் தனம்புல்லி வாயமிழ் துண்டிவள் போகந்துய்த்து**
**நீணுகம் பூண்மது ரைச்சொக்க நாதர் நெடுவரையில்**
**ஏணு ரகமும் புறமுமள் ளூறியின் பெய்தலினே.**

(இ - ள்.) நெஞ்சமே! நீண்ட நாகப்பாம்பை அணிகின்ற மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது உயர்ந்த மலையின்கண், அணிகலன்களை அணிகின்ற கொங்கையைப் பொருந்தி, வாயகத்து அமிழ்தம் உண்டு, இத் தலைமகளொடு புணர்ச்சி நுகர்ந்து அள்ளூறப் பெற்று வலிமை வாய்ந்த அகத்தினும் புறத்தினும் இன்புறுகின்றமையான் உயரிய அமிழ்தத்தை உண்ட வானவரும் என்போலச் சிறந்தவரல்லர் (எ - று.)

(வி - ம்.) சேண் - உயர்ந்த; தனம் - கொங்கை; ஏண் - வலிமை; அள் - வாயூறல். (௩௨)

## 33. தலைவன் தலைவியைப் புகழ்தல்

*புணர்ச்சியின் மகிழ்ந்த தலைமகன் தலைவியைப் புகழ்தல்.*

**சைவல நீருள் ஒளித்ததும் வேல்குகற் சார்ந்ததுங்கார்**
**மைவரை வேயு மடப்பிடி யுஞ்சென்று வைகியதும்**

**தெய்விக மார்மது ரைச்சொக்க நாதர் செழுங்கிரியில்**
**ஐவகை யாநின் குழல்விழி தோள்நடைக் கஞ்சியன்றே.**

(இ - ள்.) பாசி நீருக்குள் மறைந்துகொண்டதும், வேல் முருகக்கடவுளை யடைந்ததும், கரிய முகிலையுடைய மலையிடத்தே மூங்கிலும் இளம் பெண்யானையும் சென்று தங்கியதும் தெய்வத் தன்மை நிறைந்த மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது வளம் பொருந்திய மலையின்கண் வாழும் நின்னுடைய ஐம்பாற் கூந்தலுக்கும், விழிக்கும், தோளுக்கும் நடைக்கும் அஞ்சி யன்றே! (எ - று.)

(வி - ம்.) சைவலம் - பாசி; குகன் - முருகன்; வேய் - மூங்கில்; வைகுதல் - தங்குதல்.

கூந்தலுக்கு அஞ்சிப் பாசி நீருக்குள் மறைந்துகொண்டதென்றும், விழிக்கு அஞ்சி வேல் முருகனை அடைந்ததென்றும், தோளுக்கு அஞ்சிய மூங்கிலும், நடைக்கு அஞ்சிய பிடியும் மலையில் வைகின என்றும் கொள்க! அஞ்சியன்றே என்றது அஞ்சியேயாம் என்றவாறு. (௩௩)

## 34. பாங்கியொடு வருகெனப் பகர்தல்

தலைவன் தலைவியை நோக்கி இனி நீ வருங்கால் நின் பாங்கியொடு வருக என்று கூறல்.

**சொற்றிடு வேனொன் றினிவரும் போது நின் தோழியுடன்**
**மற்றிவண் வாமது ரைச்சொக்க நாதர் வரையகத்தே**
**கற்றிடு வோர்தங் கலையையெல் லாமிரு கண்வலையாற்**
**பற்றிடு பேரெழில் கொண்டுறை கின்றநற் பைங்கொடியே.**

(இ - ள்.) மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது மலையின்கண், கற்பார் கற்குங் கலைகளையெல்லாம் இரு கண்களாகிய வலையால் பற்றுகின்ற அழகுடன் வைகும் நல்ல பசுமையான கொடிபோல்வாய்! யான் ஒன்று சொல்வேன்: இனி நீ இவ் விடத்துக்கு வரும்போது நின் தோழியுடன் வா! (எ - று.

(வி - ம். சொற்றிடுவேன் - சொல்விடுவேன்; மற்று : அசை; இவண் - இவ்விடம். (௩௪)

### 35. தலைமகளைத் தலைமகன் விடுத்தல்

*தலைவன் தலைவியைத் தோழியரிடத்துச் செலுத்துதல்.*

**சோலைப் பசுங்கிளி யேபல தாரகை சூழ்ந்திலகப்**
**பாலைப் பொருவு பனிக்கதிர் நாப்பண் பயில்வதுபோல்**
**மாலைப் பெறுமது ரைச்சொக்க நாதர் மலயவெற்பில்**
**வேலைப் பொருவிழி யாராயம் இன்புற மேவுகவே.**

(இ - ள்.) திருமாலைத் தோற்றுவிக்கின்ற, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது பொதிய மலையகத்துச் சோலையின்கண் உறையும் கிளி போல்வாய்! பல விண்மீன்கள் சூழ்ந்து விளங்கப் பாலைப் போலும் வெள்ளிய குளிர்ச்சியான கதிர்க் கற்றையையுடைய திங்கள் நடுவே பொருந்தியிருத்தல் போல் வேலையொத்த விழிகளையுடைய தோழியர் கூட்டம் நின்னைச் சூழ்ந்து இன்புறுமாறு ஆங்குச் சென்றடைக! (எ - று.)

(வி - ம்.) தாரகை - விண்மீன்; பொருவு - ஒத்த; பனி - குளிர்ச்சி; பனிக்கதிர் - திங்கள் : அன்மொழி; நாப்பண் - நடுவே; பயிலுதல் - பொருந்துதல்; மால் - திருமால்.

சிவபெருமான் ஊழிக் காலத்தே அனைத்துலகங்களையும் ஒடுக்கித் தான் ஒடுங்காது நிற்றலின் அவனே திருமாலைத் தோற்றுவிக்கமாட்டுவான் என்க! (௩௫)

### 36. பாங்கி ஐயமுற்று வினவல்

*தலைவனொடு புணர்ந்து மீண்ட தலைவியின் தோற்ற வேறுபாடு கண்டு ஐயுற்றுத் தோழி தலைவியை வினவுதல்.*

**சௌந்தர பாண்டிய னாகித் தடாதகை தந்தவர**
**சுவந்துறு மாமது ரைச்சொக்க நாத ருயர்வரைமேல்**
**தவந்தர வந்த பொலங்கொடி யேதன் தழைகள் கொய்தோ**
**நவந்தரு வண்ட லயர்ந்தோபொன் மேனி நலிந்ததுவே.**

(இ - ள்.) சவுந்தர பாண்டியனாகத் தோன்றித், தடாதகைப் பெருமாட்டி யளித்த அரசுரிமையை மனமகிழ்வொடும் ஏற்ற, பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கின்ற

சொக்கர்பெருமானது உயரிய மலையின்கண் தவப்பயனாய் வந்த பொற்கொடி போல்வாய்! நின்னுடைய அழகிய உடல் தளர்ச்சியடைந்தது குளிர்ச்சி பொருந்திய தழைகளைக் கொய்தமையாலோ? புதுமையைத் தருகின்ற வண்டற்பாவை விளையாட்டயர்ந்தமையாலோ? (எ - று.) (ந௬)

## 37. குறையுற்று நிற்றல்

தலைவியும் தோழியும் இருக்குமிடத்தே தலைவன் சென்று அவர்கட்குப் பணிசெய்வதற்குத் தனக்கு வாய்ப்பளிக்குமாறு வேண்டுதல்.

**ஞயந்தரு சொல்லீர் பணியீர் நுங் கூந்தல் நறுங்குறிஞ்சி**
**வியந்தரு நன்மலர் கொண்டணி கோதினை விற்றிடுகோ**
**பயந்தரும் ஐவனம் வித்திடு கோநும் பணிபுரிகோ**
**சயந்தரு மாமது ரைச்சொக்க நாதர் தடங்கிரிக்கே.**

(இ - ள்.) வெற்றியைத் தருகின்ற பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது பெரிய மலையகத்து இனிமையைச் செய்யும் சொல்லையுடையீர்! அணிகலன்களையுடையீர்! நும்முடைய கூந்தலுக்கு மணங்கமழும் பெருமைமிக்க நல்ல குறிஞ்சிமலர் கொண்டு அணி செய்வேனோ? அன்றித் தினையை விற்பனை செய்து வருவேனோ? பயனளிக்கும் மலைநெல் விதைப்பேனோ? நுமக்கு ஏவற்பணி செய்வேனோ? (எ - று.)

(வி - ர்.) ஞயம் - நயம் : இனிமை; ஐவனம் - மலைநெல்; சயம் - வெற்றி. (ந௭)

## 38. அவன்குறிப்பு அறிதல்

பாங்கி, குறையுற்று நிற்கும் தலைமகனது குறிப்பை அறிதல்.

**ஞாலத் திறைவனெண் ணென்றுடைத் தேயதை நங்கையிவள்**
**நூலொத்த நுண்ணிடை நோக்கிக் குயவரை நோக்கிநின்று**
**வேலொத்த கட்கடைப் பார்வையு நோக்கும் விழையக்கண்டேன்**
**சீலத்தர் வாழ்மது ரைச்சொக்க நாதர் சிலம்பகத்தே.**

**(இ - ள்.)** நல்லவர் வாழும் மதுரையின்கண் எழுந்தருளி யிருக்கும் சொக்கர்பெருமானது மலையின்கண்ணே, உலகத்து இத் தலைவனது எண்ணம் ஒரு குறிப்புடைத்து, அதனை இவன் இந் நங்கையின் நூல்போலும் மெல்லிய இடையையும், மார்பக மாகிய மலையையும் நோக்கி நின்று, வேல்போலும் கண்ணின் கடைப்பார்வையையும் குறிப்பொடு கூடிய நோக்கையும் விரும்பு கின்றமையை யான் கண்டுகொண்டேன் (எ - று.)

**(வி - ம்.)** என் - எண்ணம்; குயவரை - கொங்கையாகிய மலை; சீலம் - ஒழுக்கம். (௩அ)

## 39. அவள்குறிப்பு அறிதல்

*பாங்கி தலைமகளது குறிப்பை யறிதல்.*

***ஞெரிகுழற் பாவை "இறைமுக நோக்கு நெடிதவன்றன்***
***புரிவிழி நோக்கிற் புவிநோக்கி யுண்ணகும் பூதலத்திற்***
***பரிவுடன் நாரைக்கு முத்திதந் தாண்ட பரமன்மலர்***
***விரிகயஞ் சூழ்மது ரைச்சொக்க நாதர் விலங்கலிலே.***

**(இ - ள்.)** மண்ணுலகின்கண் அன்போடு நாரைக்கு முத்தி யளித்துஆண்டு கொண்ட பரமனாகிய, பூக்கள் மலருகின்ற குளங்கள் சூழ்ந்துள்ள மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது மலையகத்தே செறிந்த கூந்தலையுடைய பாவைபோல் வாள், இத் தலைமகனின் முகத்தை நோக்குகின்றாள்; அவன் நெடும்பொழுது தன் விருப்பத்தோடு கூடிய விழியால் நோக்குவ னாயின்" தான் நிலத்தை நோக்கி முறுவல் கொள்ளுகின்றாள் (எ - று.)

**(வி - ம்.)** ஞெரி-நெரி, கூந்தலின் நெரிப்பு; இறை – தலைவன்; புரி- விருப்பம் தரும்; கயம் - குளம்; விலங்கல் - மலை.

*சிவபெருமான் நாரைக்கு முத்தியளித்ததனைத் திருவிளையாடற் புராணத்துக் கண்டுகொள்க.* (௩௯)

## 40. தலைவி சுனையாடியதுரைத்தல்

*தலைவி தன்னைப் பாங்கி ஐயுறுவாள் எனக் கொண்டு, தான் சுனையின்கண் நீராடியதாகக் கூறுதல்.*

**ஞொள்கலில் லாயுனை யான்விட்ட கன்றொரு நுண்பொழில்வாய்ப்**
**புள்கலென் னுஞ்சுனை யாடியங் காந்தளின் போதுகொய்து**
**தெள்கலுள் ளார்மது ரைச்சொக்க நாதர் திகிரியினில்**
**எள்கலில் லாதுனை வந்தடைந் தேனைய மெண்ணலையே.**

**(இ - ள்.)** அறவினைக்கு இளைப்புறுதவளே! யான் உன்னை விட்டு அகன்று, தெளிவுடையார் வாழும் மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையின்கண் மென்மையான இயல்பினதான ஒரு சோலையகத்தே பறவைகள் 'கல்' என்று ஒலியெழுப்பும் சுனையில் நீராடி, அழகிய காந்தள் மலர்களைக் கொய்துகொண்டு இகழாது நின்னை வந்தடைந்தேன். ஐயங் கொள்ளற்க! (எ - று.)

**(வி - ம்.)** ஞொள்கல் - இளைத்தல்; புள் - பறவை; கல் - ஒலிக் குறிப்பு; தெள்கல் - தெளிவு; திகிரி - மலை; எள்கல் - இகழ்தல் : புறக்கணித்தல். ஐ, ஏ : அசை நிலைகள்.

நின்னொடு விளையாட்டயர்தலினும் மேம்பட்ட இன்பத்தை யானடைந்தேனாயினும் நின்னைப் புறக்கணியாது நின்பால் வந்தேன் என்னுங் குறிப்புத் தோன்ற 'எள்கல் இல்லாது வந்தடைந்தேன்' என்றாள். ஐயம் எண்ணலையே என்று தலைவி தானே வலியக் கூறுதல் ஐயுறவுக்கு இடனாதல் அறிக! (௪௦)

## 41. சுனைவியந்துரைத்தல்

*தலைவியின் தோற்ற வேறுபாட்டைக் கண்டு ஐயுற்ற பாங்கி அவள் சுனையாடி வந்ததாகக் கூறியமையின் அச் சுனையின் நலத்தை வியப்பாள் போன்றும், தானும் அச் சுனையில் நீராட அவாவினாள் போன்றும் கூறுதல்.*

**தந்தக் குறிகள் குமுதங் குலாவத் தனிப்பிறைபோற்**
**சந்தத் தரும்பிய கோங்கி னகக்குறி தான்தருமேல்**

**நந்தத் தனுந்தொழு மாமது ரைச்சொக்க நாதர்வெற்பின்**
**அந்தச் சுனைபடிந் தாடற் கியானு மவாவுவனே.**

**(இ — ள்.)** சங்குப் படையையுடைய திருமாலும் தொழுகின்ற மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையகத்துச் சுனை குமுதவிதழ் போலும் வாயிதழிற் பற்குறிகள் பொருந்தவும், சந்தனம் பூசப்பட்ட கோங்கரும்பு போலும் முலையின்கண் உகிர்க்குறிகள் பொருந்தவும் தருமாயின் அச் சுனையின்கண் மூழ்கி நீராடுதற்கு யானும் விழைவேன் (எ - று.)

**(வி — ம்.)** தந்தம் - பல்; குமுதம் - வாயிதழ் : உவமையாகு பெயர்; சந்தம் - சந்தனம்; கோங்கு - கொங்கை : உவமையாகு பெயர்; நந்து - சங்கு : நந்து அத்தன் - சங்குப் படையையுடைய தலைவன் : திருமால். (சக)

## 42. பிறைதொழுகென்றல்

பாங்கி தலைவிபால் தான் கொண்ட ஐயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ளும் பொருட்டுப் பிறையைத் தொழுமாறு தலைவியை வேண்டுதல்.

**தாரா கணத்தி னடுவுற் றிலங்குமித் தண்பிறையை**
**நேராகக் கண்டு வணங்குதல் கன்னியர் நீணெறியே**
**நீரார் முடிமது ரைச்சொக்க நாதர் நிலாவரையில்**
**ஆரா அமுதனை யாய்செங்கை கூப்புதி அம்புலிக்கே.**

**(இ - ள்.)** தெவிட்டாத அமுதம் போல்வாய்! விண்மீன் கூட்டத்தின் நடுவில் அமைந்து விளங்கும் குளிர்ச்சி பொருந்திய பிறைத் திங்களை நேராகப் பார்த்து வழிபடுவது இளமகளிர்க்குரிய பழைமையான வழக்கம். நீர் நிறைந்த சடை முடியையுடைய, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது நிலவொளி வீசும் மலையின்கண் அம்புலிக்கு நின் சிவந்த கைகளைக் கூப்புவாயாக! (எ - று.)

**(வி - ம்.)** தாரா - விண்மீன்; கணம் - கூட்டம். (சஉ)

### 43. கலைமான் வினுதல்

*தலைவன் தன் வேட்டத்துக்குரிய கலைமான் ஒன்று ஈங்கு வந்ததோ வென வினவுதல்.*

**திங்கட் கொழுந்தையுங் கங்கைப் புனலையுஞ் சென்னிவைத்த**
**துங்கப் பிரான்மது ரைச்சொக்க நாதர் சுரும்பிலென்கைப்**
**புங்கத் தொடைபட்ட புண்ணொடும் ஓர்கலை போந்ததுண்டோ?**
**அங்கட் கயலிணை யிரறி விரேல் அறைமின்களே.**

(**இ - ள்.**) *மீன்களை யொத்த அழகிய கண்களையுடையீர்! இளமதியையும், கங்கை நீரையும் தலையின்கண் வைத்துள்ள சிறந்த தலைவனுகிய, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது மலையின்கண், என் கையகத்து உயரிய அம்பு பட்ட புண்ணொடும் ஒரு கலைமான் வந்ததுண்டோ? தெரிவியுங்கள்! (எ - று.)*

(**வி - உ.**) *புனல் - நீர்; சென்னி - தலை; துங்கம் - சிறப்பு; கலை - கலைமான்; புங்கம் - உயர்வு; கலை - கலைமான்; போந்தது - வந்தது; அறைமின்கள் - தெரிவியுங்கள்.* (சங)

### 44. பாங்கி தலைவியைக் கொடுஞ்சொற் கூறல்

*உண்மை யறியும்பொருட்டுப் பாங்கி தலைவி மனம் வருந்துமாறு கூறுதல்.*

**தீராத காமத் தழலுட னீண்டுத் திகைத்துநின்று**
**வாராத மானிங்கு வந்ததுண் டோவென்பர் மற்றிவர்யார்**
**பேராத சீர்மது ரைச்சொக்க நாதர் பெருவரையில்**
**தாராத தென்விடை யெம்பெரு மாட்டி தழைத்துளமே.**

(**இ - ள்.**) *நீங்காத சிறப்பினையுடைய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது பெரிய மலையின்கண் இவ்விடத்தே தீராத காமத்தியுடன் தயங்கிநின்று வந்திலாத மானை இவ்விடம் வந்ததுண்டோ என்பவராகிய இவர் யாவர்? எம் பெருமாட்டி மனம் பூரித்து, மறுமொழி கூருமை என்னே?.(எ-று.)*

(வி - ரை.) திகைத்து - தயங்கி ; மற்று - அசைநிலை ; பேராத - பெயராத : நீங்காத; தழைத்து - பூரித்து. (சச)

## 45. தலைவி பாங்கியைக் கொடுஞ்சொற்கூறல்

பாங்கி கூறியது கேட்ட தலைவி அவள் வருந்துமாறு கூறுதல்.

**துன்னார் உரந்தெறுஞ் சூர்விழி துன்னிய சுந்தரியே**
**என்னா ருயிர்த்துணை யாயக லாம லிருந்துமெனைத்**
**தென்னார் பொழில்மது ரைச்சொக்க நாதர் செழுஞ்சிலம்பில்**
**இன்னா தனபகர்ந் தாயுனைப் போல்தெவ்வர் யாரெனக்கே.**

(இ - ள்.) அழகு பொருந்திய சோலை சூழ்ந்த மதுரையின் கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது வளமான மலையின்கண் பகைவர் தம் வலிமையைக் கெடுக்கின்ற அச்சஞ் செய்யும் விழிகள் பொருந்திய அழகியாய்! நீ எனக்கு அரிய உயிர்போலும் துணையாய் என்னைவிட்டு நீங்காது இருந்தும் கொடுஞ்சொற் கூறினாய். எனக்கு உன்னைப்போல் பகைவர் வேறு யாவர் உளர்? (எ - று.)

(வி - ரை.) துன்னார் - பகைவர் ; உரம் - வலிமை ; தெறும்-கெடுக்கும் ; சூர் - அச்சம் ; துன்னிய - பொருந்திய ; தென் - அழகு ; தெவ்வர் - பகைவர். (சரு)

## 46. வேழம் வினாதல்

தலைவன் தன் வேட்டத்துக்குட்பட்ட யானையொன்று வந்ததோ வென வினவுதல்.

**தூங்குங்கை வாரண மொன்றென் கணைதைத்துச் சோரியுடன்**
**ஈங்கின்று வந்ததுண் டோவந்த துண்டெனில் எற்குரைப்பீர்**
**தாங்கும் புகழ்மது ரைச்சொக்க நாதர் தடங்கிரிவாழ்**
**வாங்குஞ் சிலைநுதல் மாமதி யானன மங்கையரே.**

(இ - ள்.) புகழ் பொருந்தியுள்ள மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது பெரிய மலையின்கண் வாழுகின்ற, வளைந்த வில்லைப்போலும் நெற்றியும், சிறந்த திங்களைப் போலும் முகமும் வாய்ந்த மங்கையர்காள்! இன்று, அசைகின்ற

கையையுடைய யானையொன்று என் அம்புபட்டுக், குருதியுடன் இவ்விடம் வந்ததுண்டோ? வந்ததுண்டெனில், எனக்குக் கூறுமின்! (எ - று.)

(வி - ம்.) தூங்கும் கை - அசைகின்ற கை : தும்பிக்கை ; கணை - அம்பு ; சோரி - குருதி ; வாங்கும் - வளைந்துள்ள ; சிலை-வில் ; நுதல்-நெற்றி ; ஆனனம் - முகம். (சசு)

## 47. பாங்கி எதிர்மொழிகொடுத்தல்

*தலைவனுக்குப் பாங்கி மறுமொழி கூறுதல்.*

**தென்னன் மலையத் துவசன் மகத்தினிற் செம்பொன்மலை**
**மன்னன் புதல்வி தடாதகைப் பேருடன் வந்துதித்து**
**மன்னும் புகழ்மது ரைச்சொக்க நாதர் வரைப்புனத்தில்**
**தன்னந் தனிவரக் கண்டிலம் யாம்கலை தந்தியுமே.**

(இ - ள்.) பாண்டியன் மலையத்துவசனது வேள்வியின்கண் மேருமலையரசனின் மகள் தடாதகை என்னும் பெயருடன் வந்து தோன்றிப் புகழ் நிலைபெற்று விளங்கும் மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையகத்துச் சோலையின்கண் மானோ, யானையோ தனியே வர, யாம் கண்டிலம் (எ - று.)

(வி - ம்.) தென்னன் – பாண்டியன் ; மகம் - வேள்வி ; புனம் - சோலை ; தந்தி - தந்தத்தை யுடையது : யானை. (சஎ)

## 48. பதி வினாதல்

*தலைவன், மகளிரை நோக்கி நும் ஊர் யாது என வினவுதல்.*

**தேசந் துதிமது ரைச்சொக்க நாதர் சிலம்பினினீர்**
**வாசம் பெறும்பதி யீதென்றென் மாட்டு வழங்கவீரென்**
**நேசம் பெறுபவர் கூறுவ ரோபழி நெஞ்சிகழ்ந்து**
**பேசம் பரமும் பிறங்கலுஞ் சூழும் பெருநிலத்தே.**

(இ - ள்.) நாட்டவர் யாவராலும் வழுத்தப்பெறுகின்ற, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்துள்ளீர்! பேசப்படும் வானமும் மலையும் சூழ்ந்துள்ள இப்

பேருலகின்கண் அன்புடையாரை மனத்தான் இகழ்ந்து குற்றங் கூறுவரோ? நீவிர் உறையும் ஊர் இதுவென என்னிடம் தெரிவிக் கின்றிலீர்! இஃது என்னை? (எ - று.)

(வி - ம்.) வாசம் - தங்குதல்; அம்பரம் - வானம்; பிறங்கல் - மலை; பெருநிலம் - உலகம்.

பழியாவது மறுமொழிகூறின் நாணமிலர் எனப்பெறுவர் என்பது பற்றிப் போலும்! (சஅ)

## 49. பெயர் வினாதல்

*தலைவன் மறுமொழி கூறாத மகளிரை நோக்கி நும் பெயர் என்ன வென்று வினவுதல்.*

**தையல்மெய் யார்மது ரைச்சொக்க நாதர் தடவரையில்**
**மையல்செய் வாள்விழி யீரூர் வினவினன் வாய்திறவீர்**
**ஐயநும் மூர்புக லீரா யினுமென் அகங்குளிரப்**
**பொய்யில்சொல் லீர்நும் பெயரேனும் எற்குப் புகலுதிரே.**

(இ - ள்.) மங்கையைத் திருமேனியின்கண் கொண்டுள்ளவ ராகிய, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது பெரிய மலையிடத்தே மயக்கஞ் செய்யும் ஒளிபொருந்திய விழியை யுடையீர்! நும் ஊர் யாதென வினவினேன். நீவிர் வாய் திறக்க வில்லை. அழகிய உம்முடைய ஊரைச் சொல்லாவிடினும் என மனங்குளிருமாறு பொய்மையற்ற சொல்லையுடைய நும் பெயரை யேனும் எனக்குக் கூறுமின்! (எ - று.)

(வி - ம்.) தையல் - பெண்; மெய்யார் - மேனியையுடையவர்; வாள் - ஒளி; ஐய - அழகிய; புகலுதிர் - கூறுமின். (சகூ)

## 50. மொழிபெற வருந்தல்

*தலைவியின் வாய்மொழி பெறும் பொருட்டு வருந்துதல்.*

**தொலைவகல் வான நிதியமிழ் தெய்தினுந் தொல்குலத்தோர்**
**இலையெனு மாற்றம் புகன்றறி யார்தங்கண் எய்தினர்க்குக்**
**கலையகல் பல்ல கடாவுய்த்தும் ஓர்விடை கண்டிலனால்**
**மலையக லாமது ரைச்சொக்க நாதர் வரையணங்கே.**

(இ - ள்.) பெருமை நீங்காத மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையகத்து அணங்கு போல்வாய்! தொலைவிடத்ததான அகன்ற விண்ணுலகச் செல்வத்தையும் அமுதத்தையும் பெறுவராயினும் அவற்றின் பொருட்டுப் பழைமையான நற்குடிப் பிறந்தோர் தம்மிடம் வந்துற்றார்க்கு இல்லை என்னும் சொல்லைச் சொல்லுவாரல்லர். நும்பால் கலைத்திறம் மிக்க பல வினாக்கள் விடுத்தும் மறுமொழி ஒன்றும் பெற்றேனில்லை (எ - று.)

(வி - ம்.) கடா - வினா; விடை - மறுமொழி; மலை - மல்லை என்பதன் இடைக்குறை : மல் - பெருமை. (ருo)

## 51. பாங்கி தலைவனை நகுதல்

பாங்கி தலைவனை எள்ளி நகையாடல்.

**தோகைநல் லாய்மது ரைச்சொக்க நாதர் சுவணவெற்பில்**
**வாகையந் தோளிவ ரம்பெய்த மானிள மாந்தழைகொண்**
**டேகயி லைப்பெரு மான்கரம் புக்கங் கிருந்ததன்றி**
**ஓகையின் வைகுந்த மொண்புனத் தோடிவ் வுலகும்விட்டே.**

(இ - ள்.) மயில் போலும் சாயலுடைய நல்லாய்! மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது பொன் மலையின்கண், வாகை மாலையைச் சூடுந் தோளையுடைய இவர் மாந்தழை கொண்டு அம்பு எய்த இளமையான மான் அச்சமுற்று, தான் மகிழ்ந்திருக்கும் ஒளி பொருந்திய சோலையோடு இவ் வுலகையும் விட்டுக் கயிலைவாணராகிய சிவபெருமானது கையிற் புகுந்து அங்கே இருக்கின்றது (எ - று.)

(வி - ம்.) தோகை - மயில்; சுவணம் - பொன்; ஓகையின் - உவகையின் : மகிழ்ச்சியொடு. (ருக)

## 52 பாங்கி தலைவனை அயிர்த்தல்

பாங்கி தலைவன்மாட்டு ஐயங்கொள்ளுதல்.

**தௌவையின் பின்வந்த பூமகள் நாயகன் தன்னையொப்பார்**
**தெவ்வையில் லாவிவர் பித்தினர் போலச் சிலதொடுத்தார்**

**ஒவ்விய நல்விடை யும்விடுத் தார்முன் உவரெவர்கொல்**
**செவ்விய மாமது ரைச்சொக்க நாதர் சிலம்பகத்தே.**

(இ - ள்) சிறப்பு வாய்ந்த பெரிய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையினிடத்தே, மூதேவியின் பின்பிறந்த திருமகள் தலைவனும் திருமாலைப் போல்வார்; பகைவர் இல்லாத இவர் பித்தர் போலச் சில வினக்கள் வினவினர்; முன்னம் பொருந்திய விடையையுங் கூறினர்; உவர் யாவர் கொல்? (எ - று.)

(வி - ம்.) தௌவை - மூத்தாள்; பூமகள் - திருமகள்; தெவ்-பகை; உவர் : உகரத்தடியாகப் பிறந்த சுட்டுப் பெயர்; செவ்விய - சிறந்த.
(ருஉ)

## 53. பாங்கி தலைவனைத் தெளிதல்

*தலைவன் தலைவியின் மாட்டுக் காதலுடைமையைப் பாங்கி தெளிதல்.*

**நற்று ரிதழியர் மாமது ரைச்சொக்க நாதர்வெற்பில்**
**உற்றோர்கை வேழம் வினயது மான்வந்த தோவென்றதும்**
**சற்றேனு மெய்யன்று தையலர் யார்க்குந் தலைசிறந்த**
**பொற்றோள் இவள்பொருட் டாலென் றுணர்ந்தனன் புந்தியினே.**

(இ - ள்.) கொன்றையாகிய நல்ல மாலையையுடைய, பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையின்கண் வந்துற்று இவர் ஒற்றைக் கையையுடைய யானை வந்ததோ வெனவும், மான் வந்ததோ வெனவும் வினவிய செயல் உண்மையன்று. மகளிர் யாவரினும் மேம்பட்ட அழகிய தோளையுடைய இத் தலைமகளின் பொருட்டே யாகும் என்பதை யான் மனத்தின்கண் உணர்ந்தேன் (எ - று.)

(வி - ம்.) இதழி - கொன்றை; ஓர்கை – ஒற்றைக்கை : துதிக்கை; புந்தி - மனம்.
(ருங)

## 54. குலமுறை கிளத்தி மணம்விலக்கல்

*தலைமகளை மணக்க விருப்பமுடையனுதலை யறிந்த பாங்கி குலமுறை யான் இயையாதென மறுத்துரைத்தல்.*

**நாவலர் சங்கத் துறைமது ரைச்சொக்க நாதர்வெற்பில்**
**பூவலர் காவிலிப் புன்குல வேடுவர் பொன்மகளை**

**மேவலர்க் கோரரி நீமண மார விரும்புவையேல்**
**காவலர் தங்குலத் திற்கேற்கு மோவிக் கடிமணமே.**

(இ - ள்.) பகைவர்க்கு அரிமாப் போல்வாய்! நாவன்மை வாய்ந்த புலவர் தம் கழகத்தின் கண்ணே வீற்றிருக்கும், மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையகத்துப் பூக்கள் மலரும் இச் சோலையின் வைகும் இழிகுலத்து வேடுவர் தம் எழில்மகளை நீ மணங்கூட விரும்புவையாயின், இப் புதுமை மணம் நின் அரசர் குலத்திற்குப் பொருந்துமோ? (எ - று.)

(வி - ம்.) சங்கம் – கழகம்; ஆர - பொருந்த : கூட; அரி - அரிமா (சிங்கம்) ; காவலர் - அரசர்; கடிமணம் - புதுமை மணம்.

சிவபெருமான் தமிழ்க் கழகத்தில் வீற்றிருந்தமையினை இறையனார் களவியலுரையானும், திருவிளையாடற் புராணத்தானும் அறிக! (டுச)

## 55. தலைவன் தலைவியை யுயர்த்திக் கூறல்

தலைமகன் தலைமகளைச் சிறப்பித்துரைத்துத் தான் மணக்க அவள் தகுதியுடையவளே என்பதைக் குறிப்பானுணர்த்துதல்.

**நிலஞ்சூழ் புலாற்கடல் இப்பிவெண் முத்தினை நீணிலத்தோர்**
**நலஞ்சூழ் பொருளெனக் கொண்டணி வார்குறை நாடலரால்**
**தலஞ்சூழ் வுறுமது ரைச்சொக்க நாதர் தடஞ்சிலைவாய்ப்**
**பொலஞ்சூழ் குறக்கொடிக் கோர்மணி யானுரம் பூணனன்றே.**

(இ - ள்.) நிலவுலகைச் சூழ்ந்துள்ள புலான்மணமுடைய கடலகத்துச் சங்கிற் றோன்றும் வெண்மையான முத்தினை இந் நெடிய உலகின்கண் உள்ளோர் நலமிக்க பொருளாகக் கொண்டு அணிந்துகொள்வார்; குறையுடையதெனக் கருதுவாரல்லர். திருப்பதிகள் பல சூழ்ந்துள்ள மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது பெரிய மலையகத்து அழகிய குறக்குலத்துக் கொடி போல்வாளுக்கு யான் ஒப்பற்ற மணியை மார்பின்கண் அணிவித்தல் சிறப்புடைத்தேயாம் (எ - று.)

(வி - ம்.) இப்பி - சங்கு; ஆல் : அசை; பொலம் - அழகு; உரம் - மார்பு; பூணல் - அணிவித்தல். (டுடு)

## 56. பாங்கி யறியாள்போன்று வினுதல்

தலைமகளிடத்துக்கொண்ட காதலை அறியாள்போன்று, பாங்கி தலைமகனை நோக்கி நீ எவளிடத்துக் காதல்கொண்டாய் என வினவுதல்.

**நீலந் தரள மரகத முங்கொண்டு நேரிழையார்**
**சீலந் திகழ்பலர் வீசிடு வார்கவண் தேவருடன்**
**தாலம் புகழ்மது ரைச்சொக்க நாதர் தடங்கிரிக்கண்**
**ஏலங் கமழ்குழல் யார்நின் னுளத்தவர் இங்கிறையே.**

(இ - ள்.) பெருமகனே! விண்ணவர்களுடன் மண்ணுலகத்தவரும் புகழும், மதுரையின்கண் எழுந்தருளியிருக்கின்ற சொக்கர் பெருமானது பெரியமலையகத்தே நீலமணி முத்துமணி பச்சைமணி ஆகியவற்றைக் கவணினின்றும் வீசுகின்றவர்கள் பொருத்தமான அணிகளை அணிந்தவரான சிறப்பு விளங்கும் மகளிர் பலராவர். மயிர்ச்சாந்து மணங்கமழும் அவர்தம்முள் யாவர் இங்கு நின் உள்ளத்தில் இடம் பெற்றவர்? (எ - று.)

(வி - ம்.) நீலம் - நீலமணி; தரளம் - முத்து; மரகதம் - பச்சைமணி; இழை - அணிகலன்; கவண் - கல்லெறி கருவி; தாலம் - மண்ணுலகம்; ஏலம் - மயிர்ச்சாந்து. (ருசு)

## 57. தலைவன் தலைவியின் தன்மைகூறல்

தலைவன் தான் காதல்கொண்ட தலைமகளின் இயல்பைக் கூறுதல்.

**நுண்ணிடை நூலிரு சீறடி தாமரை நோக்கிரண்டு**
**மண்ணிடை நீல முகமதி தோள்கழை மானுநுதற்**
**கண்ணுடை யார்மது ரைச்சொக்க நாதர் கருவரையில்**
**விண்ணிடை யும்பொரு வாரிலை என்னுயிர் மெல்லியற்கே.**

(இ - ள்.) நெற்றிக்கண்ணை யுடையவராகிய மதுரையின்பால் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது பெரிய மலையின்கண் என் உயிர்போலும் மென்மையான இயல்புடையாளுக்கு மெல்லிய இடை நூலை ஒக்கும்; இரு சிறிய அடிகளும் தாமரை மலரை ஒக்கும்; கண்கள் இரண்டும் மண்ணகத்துக் குவளை மலரை ஒக்கும்; முகம் திங்களை ஒக்கும்; தோள் மூங்கிலை ஒக்கும்; அவளை ஒப்பவர் விண்ணுலகத்திலும் இலர் (எ - று.)

**(வி - ம்.)** நோக்கு - கண் ; நீலம் - குவளைமலர் ; கழை—மூங்கில்; மானும் - ஒக்கும் ; நுதல் - நெற்றி ; கருவரை - பெருமலை ; பொருவார் - ஒப்பவர். (ருஎ)

## 58. பாங்கி தலைவியருமை சாற்றல்

*பாங்கி தலைவியின் அருமையைத் தலைவனுக்குக் கூறுதல்.*

**நூறு மகஞ்செய்த இந்திரன் காவு நுவலரிய**
**வீறூர் நிதியும்வெள் ளானையும் எய்தினும் வேடர்குலப்**
**பேறூர் வனிதை பெறற்கரி யாள்கடற் பேருலகில்**
**நீறூர் புனைமது ரைச்சொக்க நாதர் நெடுவெற்பிலே.**

(இ - ள்.) நூறு வேள்விகளைச் செய்த இந்திரனது கற்பகச் சோலையும், சொல்லுதற்கரிய சிறப்பமைந்த பெருஞ்செல்வமும் வெள்ளையானையும் பெறினும், கடலாற் சூழப்பட்ட பெரிய உலகின் கண்ணே திருநீற்றை அணியும் அடியார் புகழுகின்ற மதுரையில் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது உயரிய மலையகத்து வேடர்குலப் பேருக நிறைவுற்றிருக்கும் தலைமகள் பெறுதற்கு அருமையுடையாள் (எ - று.)

**(வி - ம்.)** மகம் - வேள்வி; கா - சோலை : கற்பகச்சோலை; வீறு ஆர் நிதி - பிறவற்றிற்கில்லாத பெருமைவாய்ந்த செல்வம் : **சங்கம்,** தாமரை (பதுமம்) முதலியன. நீறு - திருநீறு.

கற்பகச்சோலை முதலாயினவற்றை எய்தினும் எய்தக்கூடும் ; தலைமகள் எய்தற்கரியவள் என்றும், கற்பகச்சோலை முதலாயின பரிசமாகத் தரப்பெறினும், தலைமகள் எய்தற்கரியாள் என்றும் இருபொருள் பயத்தல் காண்க ! (ருஅ)

## 59. தலைவன் இன்றியமையாமை இயம்பல்

*தலைவி தன் வாழ்விற்கு இன்றியமையாத் தன்மையள் என்று கூறுதல்.*

**நெஞ்சத் தெழுகடல் போல்மயல் செய்திட்ட நேரிழையை**
**மஞ்சத் திருத்தி மருவே னெனிலுயிர் வாழ்வல்கொல்லோ**
**நஞ்சத் திருமிடற் றூர்மது ரைச்சொக்க நாதர்வெற்பில்**
**அஞ்சத்தை வென்ற நடையாயென் செய்கை யறிந்துகொள்ளே.**

**(இ – ள்.)** நஞ்சு பொருந்திய அழகிய கண்டத்தை யுடையவ ராகிய, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையகத்தே எகினத்தை வென்ற நடையையுடையாய்! என் நெஞ்சின்கண்ணே எழுகடலைப்போல் மிகுந்த மயக்கம்செய்த, பொருந்திய அணிகளை அணிந்துள்ள தலைமகளைப் பள்ளியின் கண்ணே இருக்கச்செய்து கூடேனாயின் யான் உயிர் வாழுவேன் கொல்! என் செய்கையைப் பின்னர் அறிந்துகொள்க! (எ - று.)

**(வி - ம்.)** எழுகடல் - ஏழுகடல்; மஞ்சம் - பள்ளி; அஞ்சம் - அன்னம் : எகினம்.

வாழ்வேன்கொல் என்றது வாழேன் என்னும் பொருட்டு. (௫௯)

## 60. பாங்கி நின்குறை நீயே சென்றுரை யென்றல்

பாங்கி தலைமகனை நோக்கி நின்குறையை நீயே சென்று தலைமக ளிடத்துக் கூறுக என்றுரைத்தல்.

**நேரேசென் றுன்குறை நீயே நிகழ்த்துதி நின் னுளத்தைத்**
**தாரேய் குழலறி வாளவள் உள்ளமுஞ் சார்ந்தறிவாய்**
**காரேய் பொழில்மது ரைச்சொக்க நாதர் கழைவரையில்**
**போரேய் புயத்தண்ண லேநின்னை ஈதுசெய் பொற்றொடிக்கே.**

**(இ - ள்.)** முகில் பொருந்தும் சோலையையுடைய மதுரையின் கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மூங்கிலையுடைய மலை யகத்தே போர்த்திறம் வாய்ந்த தோளையுடைய பெரும! நின்னை இவ்வாறு வருத்தும் பொன்னாலாகிய வளையலை யணிந்துள் ளவளுக்கு நேரே சென்று நீயே நின்னுடைய குறையைக் கூறுக! நின்னுடைய மனக்கருத்தை மாலை பொருந்திய கூந்தலையுடை யாள் அறிந்துகொள்வள்; அவள் உள்ளக் கருத்தையும் அணுகி அறிவாய் (எ - று.)

**(வி - ம்.)** தார் - மாலை; கார் - முகில்; கழை - மூங்கில்; தொடி- வளையல். (௬௦)

## 61. பாங்கி தலைவி பேதைமை பகர்தல்

*தலைவி பிறர் துயரம் அறியாளெனத் தலைவன்பால் பாங்கி கூறுதல்.*

**நையாத செல்வந் தருமது ரைச்சொக்க நாதர்வெற்பில்**
**பையா டரவென்று பாராது பற்றும் பருவமுறு**
**செய்யா ளனவிச் சிறுபேதை யாள்பிறர் சிந்தையினேய்**
**ஐயா அறியாத் தகைமைய ளாமென் றறிகுவையே.**

**(இ - ள்.)** *தலைவ! அழியாத செல்வத்தை அளிக்கின்ற, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையின் கண் நச்சுப்பையையுடைய ஆடுகின்ற பாம்பென்றும் பாராது அதனைப் பிடிக்கின்ற இளம் பருவத்தையுடைய, திருமகளைப் போன்ற, சிறுமை வாய்ந்த அறியாமையை யுடையாள் பிறர் மனத் துயரை அறியமாட்டாத இயல்பினளாவள் என்று அறிவாயாக! (எ - று.)*

**(கு - ம்.)** *நையாத - அழியாத ; பை - நச்சுப்பை ; செய்யாள் - சிவப்பு நிறமுடையாள் : திருமகள் ; பேதை - அறியாமை யுடையாள்.*
*(சுக)*

## 62. தலைவன் தலைவியின் முதறிவுரைத்தல்

*தலைவி பேதைமையுடையாளென்று பாங்கி கூறியதனை மறுத்து அவள் முதிர்ந்த அறிவினள் எனத் தலைவன் கூறுதல்.*

**நொந்தேனை வாழ்விக்கக் கண்ணருள் செய்து நுவல்வதன**
**அந்தா மரையை அலர்த்திக் குறுநகை யாலெனுயிர்**
**தந்தாளை மாமது ரைச்சொக்க நாதர் தடங்கிரியில்**
**வந்தாளைப் பேதையென் றோதுதி ஈதென்ன மாயமதே.**

**(இ - ள்.)** *சாகுமாறு துன்புற்றுக் கிடந்த என்னை வாழச் செய்யக் கண்ணருள் செய்தும், பேசப்படுகின்ற முகமாகிய அழகிய தாமரைமலரை மலரச் செய்தும் புன்னகையால் என்னுயிரை மீட்டுத் தந்தவளை, பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந் தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்துத் தோன்றிய வளை அறியாமையுடையாள் என்று கூறுகின்றாய்! இஃது என்ன மாயம்? (எ - று.)*

(வி - ம்.) நுவல் - பேசப்படும்; வதனம் - முகம்; அலர்த்தி - மலரச்செய்து; ஓதுதி - கூறுகின்றாய்.

என்னுயிர் தந்தாளை என்றமையால் நொந்தேனை என்றவிடத்துச் 'சாகுமாறு துன்புற்றுக் கிடந்தேனை' எனப்பட்டமை யறிக! (சுஉ)

### 63. பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக்கூறல்

தலைவி முன்னம் தன் துன்பம் போக்கினாள் என்று தலைவன் கூறின மையின் அவ்வாறே இப்போதும் கூடுக என்று பாங்கி கூறுதல்.

**நோய்தந்து நோய்க்கு மருந்துந்தந் தாளென்று நுண்ணியநூல்**
**ஆய்தந்த நீபுகன் றயன்று போலவ் வகன்பொழிற்கண்**
**வேய்தந்த தோளியை மேவுதி யார்துணை வேண்டுநிற்குச்**
**சேய்தந்த மாமது ரைச்சொக்க நாதர் சிலம்பகத்தே.**

(இ - ள்.) நுட்பமான நூல்களை ஆராய்ந்த நீ, முருகப் பெருமானைத் தோற்றுவித்தருளிய, மதுரையின்கண் எழுந்தருளி யிருக்கும் சொக்கர்பெருமானுடைய மலையினிடத்தே நோய் தந்து நோய்க்கு மருந்தும் தந்தாளென்று கூறினாய்! அந்த அகன்ற சோலையின்கண், மூங்கில் போலும் தோளையுடையாளைக் கூடுக! நினக்கு யாவர் துணை வேண்டும்? (எ - று.)

(வி - ம்.) மேவுதி - கூடுக; சேய் - முருகன்.

> "இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு
> நோய்நோக்கொன் றந்நோய் மருந்து"

என்னும் திருக்குறட்பாவின் கருத்து இப் பாடலின்கண் அமைந்துள் ளமை காண்க! (சுங)

### 64. பாங்கிக்குத் தலைவன் தன்னிலைமை கூறல்

பாங்கி மேற்கண்டவாறு கூறக் கேட்ட தலைவன் தான் வேட்கை நோயால் உழலுதலைக் கூறல்.

**நெளவியை நேர்விழி யாய்மது ரைச்சொக்க நாதர்வெற்பிற்**
**கொவ்வையந் தீங்கனி வாயிதழ்ப் பூவையைக் கூடிலனேல்**
**இவ்வுயிர் வாழ்கிலன் யானுமென் உள்ளமும் என்னுயிரும்**
**செவ்விய நின்மொழி யாலன்றி எங்ஙன் சிறப்பனவே.**

(இ - ள்.) மானையொத்த விழியையுடையாய்! மதுரையின் கண்ணே எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானுடைய மலையினிடத்தே அழகிய இனிய கொவ்வைக் கனியைப் போலும் வாயிதழையுடைய நாகணவாய்ப் பறவை போன்றவளைக் கூடேனுயின் யான் இவ் வுயிர் வாழ்வேனல்லன். செம்மை வாய்ந்த நின்னுடைய மொழியாலல்லது என் உள்ளமும் உயிரும் எவ்வாறு சிறப்பெய்தும்? (எ - று.)

(வி - ம்.) நௌவி - நவ்வி : மான்; பூவை - நாகணவாய்ப் பறவை. (சுசு)

## 65. பாங்கி உலகியலுரைத்து வரைந்துகொள்ளெனல்

தலைவன் தன் நிலையைக் கூறக் கேட்ட பாங்கி உலகில் வேட்கை கொண்டோர் சான்றோரை முன்னிட்டு வரைந்து கொள்வர்; அவ்வாறே நீயும் செய்க! என்று கூறுதல்.

**பண்டரு பாடல் படைத்தமன் னுகடம் பாடவிசூழ்**
**தண்டமிழ் மாமது ரைச்சொக்க நாதர் தடஞ்சிலம்பில்**
**ஒண்டொடி போகம் விரும்புவை யேனுல கோரறிய**
**எண்டிசை வாழ்த்த எரிசான் றெனமணந் தெய்துகவே.**

(இ - ள்.) இசையின்பந் தரும் புகழ்ப் பாடல் கொண்ட மன்னவனே! கடம்பங்காடு சூழ்ந்திருக்கின்ற, குளிர்ச்சி பொருந்திய தமிழ் விளங்கும் பெருமை வாய்ந்த மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது அகன்ற மலையகத்தே ஒளி பொருந்திய வளையலையுடையாளது இன்பத்தை விரும்புவையாயின் உலகிலுள்ளோர் அறியவும், எட்டுத் திசையினிலுமுள்ளார் வாழ்த்தவும், நெருப்புச் சான்றாகத் திருமணஞ் செய்துகொண்டு அவ் வின்பத்தை அடைக! (எ - று.)

(வி - ம்.) பண் - இசை; படைத்த - பெற்றிருக்கும் : கொண்ட; அடவி - காடு; எரி - நெருப்பு. (சுரு)

## 66. தலைவன் வரைவுமறுத்தல்

*மணஞ்செய்து கொள்ளுங்காறும் தலைவியின் கூட்டம் பெறாது ஆற்றியிருத்தல் இயலாது என்று தலைவன் பாங்கியிடம் கூறுதல்.*

**பாரோர் துதிமது ரைச்சொக்க நாதர் பருவரையில்**
**காரோதி யைவரைந் தின்புறு வாயெனல் காரிகையே**
**நீராரும் வேட்கையின் நாப்புலர்ந் தார்க்குநன் னீருடனே**
**தாரா துரவி யகழ்ந்தீகு வோமென்று சாற்றலொப்பே.**

**(இ - ள்.)** *மாதே! உலகத்தவர் வழிபடுகின்ற, மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது பெரிய மலையின்கண், கரிய கூந்தலையுடையாளை மணஞ் செய்துகொண்டு இன்புறுவாயாக என்று கூறுதல், நீர் பருகும் வேட்கையினால் நா வாடப் பெற்றவர்க்கு நல்ல நீரை உடனே தராமல் கிணறு தோண்டி அளிப்பேம் என்று கூறுதற்கு ஒப்பேயாம்* (எ - று.)

**(வி - ம்.)** *ஓதி - கூந்தல்; ஆரும் - பருகும்; புலர்தல் - வாடுதல்; துரவி - துரவு : கிணறு; அகழ்ந்து - தோண்டி.*

*'தாராது' என்பது 'தாரா' எனக் கடை குறைந்து நின்றது* (சுசு)

## 67. பாங்கி அஞ்சி அச்சுறுத்தல்

*பாங்கி தானும் அஞ்சியவளாய்த் தலைவனை அச் சோலையை விட்டு நீங்குமாறு அச்சுறுத்திக் கூறல்.*

**பிறையேய் நுதலிவட் பெற்றவில் வேடர் பெரியர்பொல்லார்**
**இறையே இவணகன் றேகுக போதும் இருண்டதினி**
**நறையேய் பொழில்மது ரைச்சொக்க நாதர் நகுவரைமேல்**
**முறையே எமருறை சீறூரை யாங்களு முந்துதுமே.**

**(இ - ள்.)** *பெரும! பிறைத்திங்களை யொக்கும் நெற்றியையுடைய இவளைப் பெற்ற விற்றொழிலை யுடைய வேடுவராகிய பெரியர் கொடியர்; இவ்விடத்தினின்றும் நீங்கிச் செல்லுக! பொழுதும் இருண்டது; இப்போது மணம் பொருந்திய சோலையையுடைய சொக்கர்பெருமானது விளங்குகின்ற மலையின்மீது முறையாக எம்மவர் வாழும் சிற்றூர்க்கு யாங்களும் விரைகின்றேம்* (எ - று,)

(வி - ம்.) இறை - தலைவன் : பெருமகன்; போது - பொழுது; நறை - மணம்; நகு - விளங்குகின்ற; முந்துதும் - விரைகின்றேம்.

இறை என்பதற்குச் 'சற்று நேரத்திலேயே' எனினுமாம். (சுஎ)

## 68. தலைவன் மடலைத் தன்மேல்வைத்துச்சாற்றல்

தலைமகளைக் கூடப்பெறேனாயின் யான் மடலேறுவேன் என்று தலைவன் கூறல்.

**பீடுறு மாமது ரைச்சொக்க நாதர் பெருவரையின்**
**மாடுறு மாதுநல் லீரென் குறையின்றும் வாய்ப்புகல்வேன்**
**சூடுறு வேன்நாளை நாளெருக் கோடென்பு சூடியெழில்**
**தோடுறு பெண்ணை மடலேறி நுங்கண்முன் தோன்றுவனே.**

(இ - ள்.) பெருமை வாய்ந்த அழகிய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது பெரிய மலைபகத்து மங்கை நல்லீர்! என்னுடைய மனக்குறையை இன்றும் வாயினாற் கூறுவேன். நாளை அன்றலர்ந்த எருக்க மலரோடு எலும்பையும் அணிந்து, அழகிய ஓலையையுடைய பனைக் கருக்கினாலாகிய குதிரை மேல் ஏறி நும்முடைய கண்முன்னே வந்து தோன்றுவேன் (எ - று.)

(வி - ம்.) பீடு - பெருமை; மா - அழகிய; மாடு - பக்கம்; தோடு- இலை : ஓலை; பெண்ணைமடல் - பனைக்கருக்கு.

பண்டும் கூறினமையின் இன்றும் கூறுவேன் என்றான். வாய்ப்புகல்வேன் என்றது நாளைச் செயலிற் காட்டுவேன் என்பதனைக் குறிப்பாகத் தெரிவிப்பதாம். (சுஅ)

## 69. பாங்கி என்னை மறைப்பின் கூட்டமரிதெனல்

பாங்கி தான் அறியாவண்ணம் தலைமக்கள் மறைத்தால் கூட்டம் இன்றாம் என்று கூறுதல்.

**புவியும் புதுவித்தும் ஒன்றின வேனும் புனலிலதேல்**
**அவியும் பழுதுறும் அங்குரி யாததை யன்ன நுங்கள்**
**குவியுங் கருத்தொன் றெனினு மொளித்திடிற் கூட்டமின்றாம்**
**கவியும் பொழில்மது ரைச்சொக்க நாதர் கவின்வரைக்கே.**

(**இ - ள்.**) நிலமும் புதிய வித்தும் பொருந்தினவாயினும் நீர் இல்லையாயின் வித்து அவிந்துபோம்: பழுதுபடும்; முளையாது. அது போன்று நுங்கள் திரண்ட கருத்து ஒன்றே எனினும், சோலை சூழும் மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்தே யான் அறியாவண்ணம் மறைப்பிராயின் நீவிர் கூடுதல் இல்லையாகும் (எ - று.)

(**வி - ம்.**) புனல் - நீர்; அங்குரியாது - முளையாது; கவியும் - சூழும்.

வரைக்கே என்பதன்கண் நான்கன் உருபு ஏழன் பொருள் பயந்தது. (சுகூ)

## 70. நகை பொருது அவன் புலம்பல்

பாங்கி நகையாடிக் கூறுதல் பொறுமல் பாங்கியிடம் தலைவன் வருந்தி யுரைத்தல்.

**பூழியர் கோன்வெப் பொழித்துநற் சைவம் புகுத்தியநங்**
**காழியர் கோன்தமிழ் வேதங் கமழுங் கடம்பவனம்**
**சூழியல் மாமது ரைச்சொக்க நாதர்தஞ் சோதிவெற்பில்**
**வாழியல் மங்கைகண் வாளினு நின்நகை வாள்கொடிதே.**

(**இ - ள்.**) பாண்டிய வேந்தனுக்குற்ற வெப்பு நோயை நீக்கி, நல்ல சிவநெறியைப் (பாண்டிய நாட்டில் மீண்டும்) புகுத்திய நம் ஆளுடைப் பிள்ளையாரது தமிழ்மறை மணக்கும் கடம்பங்காடு சூழ்ந்த பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது ஒளிவிளங்கும் மலையகத்தே வாழும் அழகிய தலைமகளின் கண்ணாகிய வாளினும் நின்னுடைய நகையாகிய வாள் கொடிது (எ - று.)

(**வி - ம்.**) பூழியர்கோன் - பாண்டியன்; பூழிநாட்டுக்குத் தலைவன்; வெப்பு – ஒருவகை நோய்; காழியர்கோன் - திருஞான சம்பந்தர்; இயல்- அழகு. (எ0)

## 71. பாங்கி தலைவனைத் தேற்றல்

மேற்கண்டவாறு புலம்பி மொழிந்த தலைமகனுக்குப் பாங்கி தேறுதல் கூறுதல்.

**பெண்ணா ரமுதென் மொழிமறுக் காள்மணம் பேசியுனைப்**
**பண்ணார் மொழியளை யெய்திடச் செய்குவன் பார்த்திபனே**

**என்னு தனவெண்ணி யேக்க முறேனுயிர்க் கின்புசெயுந்**
**தண்ணுர் பொழில்மது ரைச்சொக்க நாதர் தடங்கிரிக்கே.**

(இ - ள்.) *அரசனே! உயிர்க்கு இன்பம் அளிக்கும் குளிர்ச்சி பொருந்திய சோலை சூழ்ந்த மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்து அமுதம் போல்வாளாகிய பெண் என் மொழியை மறுக்க மாட்டாள். மணம் பேசி உன்னைப் பண்போலும் அரிய மொழியையுடையாளை அடையச் செய்வேன். எண்ணக் கூடாதவற்றை எண்ணி ஏங்கற்க!* (எ - று.)

(வி - ம்.) *பண் - இசை; பார்த்திபன் - அரசன்.* (எக)

## 72. பாங்கி தலைவனுக்குக் குறியிடங்கூறல்

*தலைவியைக் கூடுதற்குரிய இடம் இதுவெனப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.*

**பேரோங்கு மாமது ரைச்சொக்க நாதர் பெருவரையில்**
**நீரோங்கு தண்சுனைப் பாங்கர்தெய் வேந்திர நீணகரிற்**
**காரோங்கு கற்பகக் காநிகர் சோலையெங் காவலனே**
**சீரோங்க யாங்கள் பகல்விளை யாடல் செயுமிடமே.**

(இ - ள்.) *எம் மன்னவனே! பெருமையிற் சிறந்த அழகிய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது பெரிய மலையகத்தே நீர் மிகுந்த குளிர்ச்சி பொருந்திய சுனையின் பக்கத்தில் அமராவதி நகரத்துக் கற்பகச் சோலையை யொத்த முகில் நிறைந்த சோலையே சிறப்பு மிகுமாறு யாங்கள் பகற்போதில் விளையாடு மிடமாம்* (எ - று.)

(வி - ம்.) *சுனை - மலைநிலத்து நீர்நிலை; தெய்வேந்திர நீள்நகர் - அமராவதி; காவலன் - அரசன்.* (எஉ)

## 73. பாங்கி குறியிடத்து இறைவியைக்கொண்டு சேறல்

*பாங்கி தலைவனிடம் தான் குறித்த இடத்திற்குத் தலைவியை அழைத்துச் செல்லுதல்.*

**பைங்காவி னுந்திகழ் வாவியி னுஞ்சுனைப் பாங்கரினும்**
**கொங்காருங் கோட்டலர் நீர்ப்பூ நிலப்பூக் கொடியின்மலர்**

**பொங்கார்வத் தோடுகொய் தேவிளை யாடிடப் போதுகம்வா**
**சங்கார் பணைமது ரைச்சொக்க நாதர் தடத்தணங்கே.**

**(இ - ள்.)** சங்குகள் நிறைந்த வயல் சூழ்ந்த மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்து தெய்வப் பெண் போல்வாய்! பசுமையான பொழிலினும், விளங்கும் நீர் நிலையினும், சுனையை யடுத்த பக்கத்தினும், தேன் நிறைந்த கோட்டுப் பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ எனும் நால்வகை மலர்களை மிகுந்த வேட்கையொடும் கொய்து விளையாடச் செல்வோம் வருக! (எ - று.)

**(வி - ம்.)** வாவி - நீர்நிலை; பாங்கர் - பக்கம்; கொங்கு - தேன்; கோடு - மரக்கிளை; போதுகம் - செல்வோம்; பணை – பண்ணை – வயல்; தடம் - மலை. (எங)

## 74. பாங்கி தலைவியைக் குறியிடத்துய்த்து நீங்கல்

பாங்கி குறிப்பிட்ட இடத்திற்குத் தலைவியை அழைத்துவந்து நிறுத்திவிட்டுத் தான் நீங்கிச் செல்லுதல்.

**பொற்றா மரையும் கடம்பா டவியும் புனிதமுறப்**
**பெற்றார் வளமது ரைச்சொக்க நாதர் பிறங்கலின்வாய்க்**
**கற்றார் புகழிக் கடிமலர்க் காவிற் களித்திருநீ**
**சற்றே புறஞ்சென் றலர்கொண்டு மீள்வனின் தாழ்குழற்கே.**

**(இ - ள்.)** பொற்றாமரைத் திருக்குளமும், கடம்பங்காடும் சிறப்பெய்துமாறு பெற்றுள்ள மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையகத்தே கற்றவர்கள் புகழும் இம் மண மலர்ச் சோலையில் நீ இன்புற்றிருப்பாயாக! யான் சிறிது அப்புறஞ் சென்று உனது தாழ்ந்த கூந்தலுக்கு மலர் கொய்து கொண்டு மீண்டு வருவேன் (எ - று.)

**(வி - ம்.)** கடிமலர் - மணமலர் : புதுமலர் எனினுமாம். (எச)

### 75. நீங்கும் பாங்கி தலைவற்குரைத்தல்

*தலைவியைக் குறியிடத்தில் நிறுத்தி நீங்கும் பாங்கி ஆங்கு எதிர்ப் பட்ட தலைவனுக்குக் கூறுதல்.*

**போதா ரெழிற்றிரு நேரெம் இறைவி புரவலநின்**
**தாதார் மலர்ச்செழுந் தார்தோ யகலந் தனக்குரியள்**
**காதார் விழியளை நின்னுயி ராகக் கருதுநிசொல்**
**மாதார் வளமது ரைச்சொக்க நாதர் வரையிடத்தே**

(இ - ள்.) *மன்னவ! கலைமகள் தங்கும் வளமான மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்தே தாமரை மலரில் உறையும் அழகிய திருமகளை யொத்த எம் தலைவி, பூந்தாது நிறைந்த மலராற் கட்டப்பட்ட வளமான மாலை பொருந்திய நின் மார்பினுக்கு உரிமையுடையாள், காதிற் சென்று பொருந்தும் விழியினையுடையாளை உன்னுடைய உயிராகக் கருதுவாயாக!* (எ - று.)

(வி - ம்.) *போது - மலர்; திரு - திருமகள்; இறைவி - தலைவி; புரவலன் - மன்னன்; தாது - பூந்தாது : மகரந்தப்பொடி; அகலம் - மார்பு; சொல்மாது - கலைமகள்; ஆர்தல் - தங்குதல்.* (எரு)

### 76. தலைமகன் தலைவியைக் குறியிடத்தெதிர்ப்படல்

*பாங்கி சொன்ன குறியிடத்தில் தலைவன் தலைவியை எதிர்ப்படுதல்.*

**பௌவத் திரைதரு முத்தொத்த வெண்ணகைப் பைந்தொடியே**
**இவ்வெற் பொழுதி லெனக்கெதிர் நீதனி யெய்தியதென்**
**எவ்வத் தினைத்தவிர்த் தின்னுயி ரீந்திட எண்ணினையோ**
**தெய்வத் திருமது ரைச்சொக்க நாதர் செழுங்கிரிக்கே.**

(இ - ள்) *தெய்வத் தன்மை பொருந்திய அழகிய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது வளமான மலையினிடத்தே, கடலலை தருகின்ற முத்துப் போலும் வெண்மையான பற்களையும், பசுமையான வளையலையும் உடையவளே! இப் பகல் நேரத்தில் எனக்கு முன்வந்து நீ தனியே எதிர்ப்பட்டது*

என்னை? துன்பத்தைப் போக்கி என் இனிய உயிரை அளிப்பதற்கு எண்ணங் கொண்டாயோ? (எ - று.)

(வி - ம்.) பௌவம் - கடல்; திரை - அலை; எல் - பகல்; எவ்வம்- துன்பம். (எசு)

## 77. புணர்ச்சியின் மகிழ்தல்

*தலைவன் தலைவியைக் கூடி இன்புறுதல்.*

**மலர்க்காவி னூடிந்த மங்கையெற் கீந்த வரம்பிலின்பஞ்**
**சிலர்க்கேனும் வாய்த்திடு மோஇனி யான்முனஞ் செய்தவமே**
**குலக்கா விரிதொழும் வையையந் தீம்புனல் கோதில்வளன்**
**நிலக்கார் தருமது ரைச்சொக்க நாதர் நெடுவெற்பிலே.**

(இ - ள்.) அழகிய காவிரியாறும் வழிபடும் சிறப்பு வாய்ந்த வையையாற்றின் அழகிய இனிய நீர் குற்றமற்ற வளத்தை நிலத்திற்கு நிறைக்கின்ற மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர் பெருமானது உயரிய மலையகத்துப் பூஞ்சோலையினிடையே இம் மங்கை எனக்கு அளித்த அளவற்ற இன்பம் சிலருக்கேனும் கிட்டுமோ? இங்ஙனம் யான் பெற்றது முன்னைப் பிறவியிற் செய்த தவப்பயனேயாம் (எ - று.)

(வி - ம்.) ஊடு - இடையே; வரம்பு - அளவு; குலம் - அழகு; கோது - குற்றம்; நிலத்துக்கு என்பதன் அத்துச்சாரியை தவிர்ந்து, நிலம் + கு = நிலக்கு எனப் புணர்ந்தது. (எள)

## 78. இற்கொண்டேகல்

*பாங்கி தலைவியை மனையிடத்திற் கூட்டிப்போதல்.*

**மாதே தினையும் விளைந்தன நம்மவர் வந்துபுன**
**மீதே குரல்கொய்வர் மற்றிங் கிருப்பதென் வீதிதொறும்**
**போதே கமழ்மது ரைச்சொக்க நாதர் பொலஞ்சிலம்பில்**
**நீதே யிலாதஞ் சிறுகுடிக் கேயினிச் சேறுதுமே.**

(இ - ள்.) மாதே! தினைப்பயிர்களும் விளைந்தன; நம் மவர்கள் வந்து புனத்தின்கண் கதிர்கொய்வர்; இங்கு இருப்பது

என்னை ? தெருத்தோறும் பூ மணக்கும் மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது அழகிய மலையகத்துக் குற்றம் சிறிதுமற்ற நம் சிறுகுடிக்கு இப்பொழுதே செல்லுவோம் (எ-று.)

(வி - ம்.) குரல் - கதிர் ; கொய்தல் - அறுத்தல் ; போது-மலர். பொலம் - பொன் : அழகு; சேறுதும் - செல்லுவோம். (எஅ)

### 79. பாங்கி யாடிடம்விடுத்துக்கொண் டகறல்

சோலையில் வழக்கமாக விளையாடும் இடத்தைவிட்டுத் தலைவியைத் தோழி அழைத்துச் செல்லுதல்.

**மிடையும் புனக்கிள்ளை காளளி காள்இதண் விட்டெமதில்**
**அடையும் படிசெலெஞ் சிற்றூர் வழியை யறைந்திடுமின்**
**விடையுந் தியமது ரைச்சொக்க நாதர் மிளிர்சிலம்பிற்**
**படையுந்து கைக்கழை வில்லோன் நிகரெங்கள் பார்த்திபற்கே.**

(இ - ள்.) காளையை யூர்தியாகச் செலுத்திய, மதுரையின் கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது விளங்குகின்ற மலையகத்தே நெருங்கும் சோலையின்கண் வாழும் கிளிகளே! வண்டுகளே! படையைச் செலுத்துகின்ற, கையின்கண் கரும்பை வில்லாகக்கொண்ட காமனையொத்த எங்கள் மன்னவனுக்குப் பரண் விட்டு யாம் எம் இல்லத்தை யடையுமாறு செல்லுகின்ற எமது சிற்றூர் வழியைக் கூறுவீராக (எ - று.)

(வி - ம்.) மிடையும் - நெருங்கும் ; அளி - வண்டு ; இதண் - பரண் ; விடை - காளை ; உந்திய - செலுத்திய; மிளிர் - விளங்கும் ; கழைவில்லோன் - கரும்பை வில்லாகவுடைய காமன். (எகூ)

### 80. தலைவன் வறும்புனம்நோக்கி மான்முதலியவற்றை வினவுதல்

தலைவி முதலாக யாருமில்லாச் சோலையைக் கண்டு, தலைவன் ஆங்கு உறையும் மான் முதலியவற்றை வினவுதல்.

**மீனேர் விழியும்வின் மின்னேர் இடையும் விரைமலர்ப்பூந்**
**தேனேர் மொழியுங்கொண் டிங்குநின் றூரெங்குச் சென்றனரோ**

**மானே கிளியே மயிலே குயிலே வகுத்திடுவீர்**
**பானேர் விடைமது ரைச்சொக்க நாதர் பருப்பதத்தே.**

(இ - ள்.) பால்போலும் வெண்ணிறம் வாய்ந்த காளையை ஊர்தியாகக்கொண்ட, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்து மானே! கிளியே! மயிலே! குயிலே! மீன்போலும் விழியும், விண்ணில் தோன்றும் மின்னலைப் போலும் மணங்கமழும் மலரின்கண்ணதான அழகிய தேன் போலும் பேச்சும் கொண்டு இங்கு நின்றவர்கள் எவ்விடத்தே சென்றனரோ? உரைப்பீர்! (எ - று.)

(வி. - ம்.) விரை - மணம்; வகுத்திடுவீர் - உரைப்பீர்; பருப் பதம் – மலை. வெண்ணிறமுடைய காளைக்குப் பாலை உவமை கூறினர். (அ0)

## 81. இறைவிக்கு அவன்வரவு அறிவுறுத்தல்

பாங்கி தலைவன் வருதலைத் தலைவிக்குத் தெரிவித்தல்.

**முப்புவ னத்தினு மொப்பே யிலாநினை முன்னியின்று**
**மைப்பெறு கண்ணி நின் னூர்தேடி வந்தனர் வான்தருவுங்**
**கைப்பெரு வண்மையைக் கண்டுட் சமழ்க்குநின் காதலன்பர்**
**மெய்ப்பொரு ளாமது ரைச்சொக்க நாதர்தம் வெற்பகத்தே.**

(இ - ள்.) மெய்ப்பொருளாகிய, மதுரையின்கண் எழுந்தருளி யிருக்கும் சொக்கர்பெருமானுடைய மலையகத்தே, மைபூசப்பெற்ற கண்ணையுடையாய்! கையினால் வழங்கும் வள்ளன்மையைக் கண்டு கற்பகமரமும் உள்ளம் நாணும்படியான, உன்றன் காதலன்புடை யார், மூவுலகினும் ஒப்பற்ற உன்னைக் கருதித் தேடி உன் ஊர் வந்தனர் (எ - று.)

(வி - ம்.) முப்புவனம் - மூவுலகம் : மண்ணுலகம், மேலுலகம், கீழுலகம்; முன்னி - கருதி; வான்தரு - கற்பகமரம்; வண்மை - வள் ளன்மை; சமழ்க்கும் - நாணும். (அக)

## 82. வண்டுறை தாரான் வந்தெதிர்ப்படுதல்

*வண்டுகள் தங்கும் மலர்மாலையை அணிந்துள்ள தலைவன், தலைவியின் ஊர்க்கு வந்து எதிர்ப்படுதல்.*

**மூதறி வாரன்னை துஞ்சா திருக்கவும் மொய்யிருளில்**
**மாதர சேபது மக்கத வந்திற வாதும்வந்து**
**நீதக வோடிங்கு நிற்கவென் நான்முன் நிகழ்த்துதவம்**
**மேதகு மாமது ரைச்சொக்க நாதர் விலங்கலிலே.**

(**இ - ள்.**) மேன்மை வாய்ந்த அழகிய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கின்ற சொக்கர்பெருமானது மலையகத்து, மங்கையர்க்கரசி! முதிர்ந்த அறிவினையுடையரான அன்னை துயிலாதிருக்கவும், தாமரை மலர்க்கதவந் திறக்கப்படாதிருக்கவும் நிறைந்த இருளில் நீ நலத்துடன் இங்கு வந்து நிற்க யான் முற்காலத்தே செய்த தவம் என்னே! (எ - று.)

(**வி - ம்.**) மூதறிவு - முதிர்ந்த அறிவு; மொய்த்தல் - நெருங்குதல் : நிறைதல்; பதுமம் - தாமரை; தகவு - நன்மை; மேதகு - மேன்மை வாய்ந்த; விலங்கல் - மலை.

இல்லத்தின் புறத்தே இரவுக்குறிக்கண் வந்த தலைவி திருமகள் போலுதலின் தாமரை கூம்பியிருக்கவும் அவள் ஆண்டுப் போந்ததனை வியந்துரைத்தான். முன் நிகழ்த்து தவம் என்பதற்கு நான் முற்பிறப்பிற் செய்த தவம் என்றவாறு. (அஉ)

## 83. தலைமகள் நெறியினதருமை நினைந்திரங்கல்

*தலைவி தலைவன் வரும் வழியினது அருமையை நினைந்து வருந்துதல்*

**மெய்க்கா வலுமின்றி வேழமுங் கேழலும் வேங்கையும்சார்**
**இக்கா னெறிகடந் திங்குவந் தீரென் இயற்றுதவம்**
**மைக்கார் தவழ்மது ரைச்சொக்க நாதர் வரையிடத்தே**
**தக்கோர் புகழண்ண லென்பொருட் டோவித் தனிவரவே.**

(**இ - ள்.**) தகுதி வாய்ந்தோரால் புகழப்படும் பெருமானும் மதுரையின்கண் எழுந்தருளியிருப்பவரும் ஆகிய சொக்கர்பெருமானது கரிய முகில் தவழும் மலையகத்தே, யானையும், பன்றியும்,

புலியும் உறையும் இக் காட்டு வழியைக் கடந்து இங்கு வந்தீர்! இத் தனி வருகை என் பொருட்டோ? யான் செய்த தவம் என்னே! (எ - று.)

(வி - ம்.) வேழம் - யானை; கேழல் - பன்றி; வேங்கை - புலி; இயற்று தவம் - செய்த தவம்; மை - கருமை. (அங)

## 84. உடன்போக்கு

தலைவன் தன்னூர்க்குத் தலைவியை உடனழைத்துச் செல்லுதல்.

**மேருவில் லார்மது ரைச்சொக்க நாதர் விலங்கலிற்பொன்**
**தாருவல் லாலிணை யில்லாக் கொடையர்பின் ஞயுமற்றும்**
**யாருமில் லாவுணர் வாய்த்துயில் கங்குலி லேகினளல்**
**காருமல் லானிக ரில்லாக் கருங்குழற் காரிகையே.**

(இ - ள்.) மேரு மலையை வில்லாகக் கொண்டவராகிய, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்து, இரவும் முகிலும் அல்லாது வேறு ஒன்றும் ஒப்பாகாத கரிய கூந்தலையுடைய தையல், அழகிய கற்பக மரமன்றி இணையில்லாத வள்ளன்மையுடையார் பின்னே, அன்னையும் மற்றும் யாவரும் இல்லாத உணர்வினளாய், அனைவரும் உறங்கும் இராப் பொழுதில் உடன் சென்றனள் (எ - று.)

(வி - ம்.) தாரு - கற்பகமரம்: தரு-தாரு என நீண்டது; கங்குல்- இரவு; அல் - இரவு; கார் - முகில்.

இது செவிலி கூற்றும். (அச)

## 85. தலைவன் தலைவியை வரைந்திருத்தல்

தலைவன் தலைவியைத் திருமணஞ் செய்துகொண்டு வாழ்தல்.

**மையா ரிரவு புலருமுன் தன்பதி வந்துமறைப்**
**பொய்யா விதியின் நிறையங்கி முன்பு புவியறியச்**
**செய்யா ளனையளை மன்றல்செய் தின்பஞ் சிறந்திருந்தான்**
**செய்யார் வளமது ரைச்சொக்க நாதர் சிலம்பகத்தே.**

**(இ - ள்.)** வயல் சூழ்ந்த மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது மலையகத்தே, கருமை நிறைந்த இரவுப் பொழுது விடியு முன்னரே தன்னூர்க்கு வந்து மறைநூலைப் பொய்யாத முறைப்படி நிறைந்த நெருப்பின் முன்னர் உலகினர் அறியத் திருமகளை ஒத்தவளைத் தலைவன் மணஞ் செய்துகொண்டு இனிதே வாழ்ந்திருந்தனன் (எ - று.)

**(வி - ம்.)** மை - கருமை; புலர்தல் - விடிதல்; அங்கி - நெருப்பு : இது கண்டோர் கூற்றாகக் கொள்ளற்பாற்று. (அஙி)

## 86. வருந்திய செவிலிக்கு வழக்குரைத்தல்

*தலைமகளைப் பிரிந்து வருந்தியிருந்த செவிலிக்குச் சான்றோர் உலக வழக்குரைத்து ஆற்றுவித்தல்.*

**மொழிவதென் அன்னை மகளையுன் னுடி முழுதும்சிந்தை**
**அழிவதென் தேன்மல ரெங்கே பிறப்பினும் ஆர்ந்தணிந்து**
**கழிமகிழ் வெய்துநர் கையவன் றேகலங் காதுமகிழ்**
**கொழிதமிழ் மாமது ரைச்சொக்க நாதர் குலகிரிக்கே.**

**(இ - ள்.)** கொழித் தெடுக்கப்பட்ட தமிழ் விளங்கும் பெருமை வாய்ந்த மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர் பெருமானது சிறந்த மலையகத்து, அம்மையே! சொல்வதற்கு யாது உள்ளது? மகளை மனத்திற் கருதி முற்றும் உள்ளம் வருந்துவது என்னை? தேனும் மலரும் எங்கே தோன்றினும் தேனைப் பருகியும் மலரை அணிந்தும் மிகுந்த மகிழ்ச்சியடைபவர்க்கல்லவா அவை உரிமையுடையன? மனக் கலக்கமுறாது மகிழ்க! (எ - று.)

**(வி - ம்.)** அழிதல் - வருந்துதல்; கை - இடம்; கொழித்தல் - தெள்ளுதல்.

தேன் மலர் ஆர்ந்து அணிந்து என்பவற்றை நிரனிறையாகக் கொள்க! (அசு)

## 87. தலைவி பாங்கிக்குத் தன்னிலை யுணர்த்துமின் எனல்

*தலைவனொடு இன்புற்று வாழும் தலைவி அந் நிலையைத் தன் பாங்கிக்குக் கூறுமாறு ஆங்குள்ள தோழியரிடங் கூறுதல்.*

**மோனத் தவருறை கானத் தகன்றெழில் முற்றுமுயர்**
**வானத் தவர்புகழ் எம்மிறை யூர்நண்ணி மன்றலெய்தி**

**ஞானத் தவருறை மாமது ரைச்சொக்க நாதர்வெற்பிற்**
**கோனத்த வாழ்வதைக் கூறீரென் பாங்கிக்குக் கோதையரே.**

**(இ - ள்.)** தோழியர்காள்! மெய்யறிவுடையார் வாழுகின்ற பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர் பெருமானது மலையகத்தே வாய் வாளாமையாகிய நோன்புடைய முனிவர்கள் தங்கும் காட்டைக் கடந்து, அழகு நிறைந்த, சிறந்த வானவர்களாலும் புகழப்படுகின்ற, எம் தலைவனுடைய ஊரை அடைந்து மணந்துகொண்டு, தலைவன் விரும்புமாறு யான் வாழுகின்றதனை என் பாங்கிக்குக் கூறுவீர்! (எ - று.)

**(வி - ம்.)** மோனம் - வாய்வாளாமை : பேசாமை; மன்றல் - மணம்; கோன் - தலைவன்; நத்த - விரும்ப; கோதையர் - மகளிர். (அஎ)

## 88. தலைவன் பிரிந்தமை பாங்கி தலைவிக்குரைத்தல்

*தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றானாக, அதனைப் பாங்கி தலைவிக்குக் கூறுதல்.*

**மௌவலங் கோதைநல் லாய்நந் தலைவர் மகபதியின்**
**தெய்வத வெண்குஞ் சரச்சாபந் தீர்த்தருள் செய்துறுநன்**
**மைவளர் சீர்மது ரைச்சொக்க நாதர் வரையிடத்தே**
**ஐவளர் முத்தங் கொணர்வானின் கொங்கைக் ககன்றனரே.**

**(இ - ள்.)** இந்திரனின் தெய்வத்தன்மை பொருந்திய வெள்ளையானையது சாவத்தைப் போக்கி அருள்செய்த, மிக்க நன்மை வளருகின்ற பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்தே, முல்லை மாலையை அணிந்திருக்கின்ற பெண்ணினல்லாய்! நம் தலைவர் நின் கொங்கைக்கு அழகு மிக்க முத்துக்கள் கொண்டுவரும்பொருட்டுப் பிரிந்து சென்றனர் (எ - று.)

**(வி - ம்.)** மௌவல் - முல்லை; மகபதி - இந்திரன்; குஞ்சரம் - யானை; ஐ - அழகு.

இது பொருள்வயிற்பிரிவு. ஆலவாயண்ணல் வெள்ளையானை சாவந் தீர்த்ததனைத் திருவிளையாடற் புராணத்திற் கண்டுகொள்க! (அஅ)

## 89. பிரிவாற்றுமை

தலைவன் பிரிவாலுற்ற துயரைத் தலைவி பொறுத்துக்கொள்ள மாட்டாமை.

**யவமுத லாமுண வுப்பொரு ளும்வகை யாறுதரும்**
**நவநிதி யும்மிகு மாமது ரைச்சொக்க நாதர்வெற்பில்**
**தவநிதி போன்றுனை நீங்கேனென் ருேது தலைவர்மொழி**
**அவநிதி போற்பொய்க்கு மென்ருே சொலாதிங் ககன்றதுவே.**

**(இ - ள்.)** நெல் முதலாய உணவுப் பொருள்களும், வையையாறு வழங்குகின்ற ஒன்பது வகைச் செல்வங்களும் மிகுந்துள்ள பெருமை பொருந்திய சொக்கர்பெருமானுடைய மலையகத்துத் தவத்தாற் பெற்ற செல்வத்தைப் போன்று 'உன்னை விட்டுப் பிரியேன்' என்று சொல்லிய தலைவர், சொல்லாதே இவ்விடத்தினின்றும் பிரிந்து சென்றது? தம் சொல் பயனற்ற பொருள்போலப் பொய்யாகிப் போகுமென்ருே? (எ - று.)

**(வி - ம்.)** யவம் - நெல்; நவநிதி - ஒன்பது வகைச் செல்வம் : (கர்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, பதுமநிதி, மகாநிதி, மகா பதுமநிதி, முகுந்தநிதி, நந்தநிதி, நீலநிதி) : புதுமையான செல்வங்கள் எனினுமாம். அவநிதி - பயனில் பொருள். (அகூ)

## 90. தலைவி கொடுஞ்சொற்கூறல்

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி இன்னுச்சொல் கூறுதல்.

**யானையை நாகத்தை யெய்தும் நரிபரி யாக்கியுமம்**
**மானைவெவ் வாய்நரி யாக்கியும் தூய வளைபகர்ந்தும்**
**கோனென வாழ்மது ரைச்சொக்க நாதர் குளிர்வரையில்**
**வானமு துங்கைக்கும் பன்னுட் பருகினெம் மன்னவற்கே.**

**(இ - ள்.)** யானையையும் பாம்பையும் கணை செலுத்தி வீழ்த்தியும், நரிகளைக் குதிரைகளாக்கியும், மீண்டும் அக் குதிரைகளைக் கொடிய வாயையுடைய நரிகளாக்கியும் தூய்மையான வளையல் விலை கூறியும், அரசனென வாழ்ந்த மதுரையின்கண் எழுந்தருளியுள்ள சொக்கர்பெருமானது குளிர்ச்சி பொருந்திய மலையகத்தே எம் தலைவனுக்கு வானுலகத்து அமிழ்தமுங்கூடப், பலநாள் பருகினுல் கசக்கும் (எ - று.)

(வி - ம்.) மான் – குதிரை; வளை - வளையல்; கோன் - அரசன்; பருகுதல் - உட்கொள்ளுதல்.

சொக்கர்பெருமான் யானை யெய்தமை, நாக மெய்தமை, நரிபரி யாக்கியமை, பரிநரியாக்கியமை, வளையல் விற்றமை ஆகியவற்றைத் திருவிளையாடற் புராணத்திற் கண்டுகொள்க! (௯0)

## 91. வரவுணர் பாங்கி தலைவிக் குணர்த்தல்

பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வருவதனைப் பாங்கி தலைவிக்குக் கூறுதல்.

**யுகம்பல கண்ட திருவால வாயென் றுறத்துதித்துச்**
**சகம்பல சொல்மது ரைச்சொக்க நாதர் தடங்கிரிவாய்ச்**
**சுகம்பல நல்கு நின் தோள்பிரிந் தேகு துணைவர்வந்தார்**
**பிகம்பல வொல்குமின் சொல்லா யுறுக பெருமகிழ்வே.**

(இ - ள்.) குயில்கள் பலவும் நாணுகின்ற இனிய சொல்லை யுடையாய்! உலகம் ஊழி பல கண்ட திருவாலவாய் என்று மிகவும் போற்றிப் பலவாறு புகழுகின்ற மதுரையின்கண் எழுந்தளி யுள்ள சொக்கர்பெருமானது பெரிய மலையகத்து மிகுந்த இன்பம் அளிக்கும் நின்னுடைய தோளைப் பிரிந்த துணைவர் மீண்டு வந்தனர்; பெருமகிழ்ச்சியுறுக! (எ - று.)

(வி - ம்.) யுகம் - ஊழி; சகம் - உலகம்; பிகம் - குயில்; ஒல்கும்- நாணும். (௯௧)

## 92. தலைவி பாங்கிக்குத் தன்னிலை தெரித்தல்

தலைவி தனது மனநிலையைப் பாங்கிக்குத் தெரிவித்தல்.

**பூகம் தவழ்மது ரைச்சொக்க நாதர் உயர்வரைமேல்**
**ஆகம் பசலை யுறப்பிரிந் தார்நம் மகத்துவந்தால்**
**மேகம் வரக்கண்ட கேகயம் போற்களி மேவலல்லாற்**
**சோகம் தருபெரும் ஊடலெவ் வாறுளந் தோன்றுவதே.**

(இ - ள்.) குரங்குகள் தவழுகின்ற, மதுரையின்கண் எழுந் தருளியுள்ள சொக்கர்பெருமானது உயர்ந்த மலையகத்தே உடலில்

தேமல் தோன்றுமாறு நம்மைப் பிரிந்து சென்றவர் இல்லத்திற்கு மீண்டுவரின் கார்முகில் வரக்கண்ட மயில் போல இன்பம் பொருந்தப் பெறுவதல்லாது வருத்தம் தரும் பெரிய ஊடல் எவ்வாறு மனத்தில் தோன்றும்? (எ - று.)

(வி - ம்.) யூகம் - குரங்கு; ஆகம் – உடம்பு; பசலை - தேமல்; கேகயம் - மயில்; ஊடல் - பிணக்கம்.

துனியும், புலவியும் நோக்கியும் சோகம் தரும் என்றது கொண்டும் 'பெரும் ஊடல்' என்றார் எனக் கொள்க! (கூ௨)

## 93. புணர்ச்சியின் மகிழ்தல்

**யோகம் பயினு முனிவோ ருளத்தளி யுற்றுமைக்குப்**
**பாகந் தருமது ரைச்சொக்க நாதர் பருப்பதத்தின்**
**மேகந் தரமெனு ஓதியின் றீந்தவிம் மெய்ந்நலத்தின்**
**மோகந் தவிர்வதுண் டோபல வூழி முயங்கினுமே.**

(இ - ள்.) ஓகப் பயிற்சியுடைய முனிவர்தம் மனக்கோயிலில் தோன்றி, அம்மைக்கு உடலிற் பாதியை அளித்துள்ள, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்தே பன்னெடுங்காலம் புணர்ந்து இன்புறினும் முகிலுக்கு ஒப்பாகும் எனும்படியுள்ள கூந்தலையுடையாள் இன்று தந்த இவ் வுண்மையான இன்பத்தின்பால் கொண்ட வேட்கை நீங்குமோ? (எ - று.)

(வி - ம்.) ஓ(யோ)கம் - மன ஒருமை; தளி - கோயில்; உமை - அம்மை (உமாதேவி); ஓதி - கூந்தல்; மோகம் - வேட்கை. (கூ௩)

## 94. தலைவன் பொருள்வயிற் பிரிவு பாங்கிக்குணர்த்தல்

தலைவன் தான் பொருள் தேடிவரும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்ல விருத்தலைப் பாங்கிக்குத் தெரிவித்தல்.

**யௌவன மேனிக் கணியவுந் துய்க்கவும் யான்விரைந்து**
**செவ்வனந் தேடிக் கொணருவல் பொன்பல தேசமும்போய்த்**
**தைவிக மார்மது ரைச்சொக்க நாதர் தமிழ்வரையில்**
**இவ்வகை யோதிரு கண்ணுயி ரன்னநின் ஏந்திழைக்கே.**

(இ - ள்.) தெய்வத் தன்மை நிறைந்த மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது தமிழ் விளங்கும் மலையகத்தே, இளமையான உடலுக்கு அணிதற்கும், நுகருதற்கும் யான் பல நாடுகளுக்குஞ் சென்று நன்கு பொன் தேடிக்கொண்டு விரைந்து வருவேன். இரு கண்ணும் உயிரும் போன்ற நின் தலைவிக்கு இதனைக் கூறுவாய்! (எ - று.)

(வி - ம்.) யௌவனம் - இளமை; துய்க்க - நுகர (அநுபவிக்க); செவ்வனம் - நன்கு: கொணருவல் - கொண்டு வருவேன்; தைவிகம் - தெய்விகம் : தெய்வத் தன்மை; கண் உயிர் – கண்ணும் உயிரும்; ஏந்திழை - தலைவி : (அணிகலன்களை அணிந்துள்ளவள் என்னும் பொருட்டு). (கூச)

## 95. தலைவன்பிரிவு பாங்கி விலக்கல்

பொருள் தேடிவரும்பொருட்டுப் பிரிந்துசெல்லக் கருதிய தலைமகன்பால், அப் பிரிவைக் கைவிடுமாறு பாங்கி கூறுதல்,

**வரைபுரை யுந்தடந் தோளண்ண லேகி வருவையெனும்**
**உரைபுகி னெங்ஙன் பொறுக்குங் கொலோவுயி ரோங்குகடல்**
**தரையுரை மாமது ரைச்சொக்க நாதர் தனிச்சிலம்பில்**
**திரையுறு பாற்கடல் தோன்றுது வந்தநந் தெள்ளமுதே.**

(இ - ள். பெருகுகின்ற கடலாற் சூழப்பட்ட மண்ணுலகத்தவர் புகழ்ந்து பேசும் பெருமை பொருந்திய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானுடைய ஒப்பற்ற மலையகத்தே, குன்றை யொக்குந் தோளையுடைய தலைவ! அலையையுடைய திருப்பாற் கடலிடத்தே தோன்றுது இங்கு வந்துற்ற நமது தெளிந்த அமுது போல்வாள் நீ பிரிந்து சென்று வருவாய் என்னும் உரை செவியகத்தே புகுமாயின் எவ்வாறு பொறுத்துக் கொள்வாள்? (எ - று.)

(வி - ம்.) ஏகி - பிரிந்து சென்று; திரை - அலை. (கூரு)

## 96. தலைவன் தன்பிரிவுக்குப் பாங்கியை யுடன்படுத்தல்

தலைவன் தான் பிரிந்துசெல்லுதலைப் பாங்கி ஒப்புக் கொள்ளுமாறு செய்தல்.

**வாங்குஞ் சிலைநுத லாளரும் போகம் வழங்கியுயிர்**
**தாங்கும் படியெனைக் காத்தநல் லாய்உன் றனக்கரிதோ**

**தேங்கும் புனல்மது ரைச்சொக்க நாதர் சிலம்பகத்தில்**
**ஓங்கும் பசுங்கழைத் தோளிதுன் பாற்றுத லோர்ந்திடினே.**

(**இ — ள்.**) வளைந்த வில்லையொத்த நெற்றியை யுடையாளது பெறுதற்கரிய இன்பத்தை எனக்கு அளித்து உயிர் தாங்கி யிருக்குமாறு என்னைக் காப்பாற்றிய நலமுடையாய்! ஆராய்ந்து பார்த்தால், நீர்வளந் தங்கும் மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்து வளரும் பசுமையான மூங்கில் போலும் தோளையுடையாளது துன்பத்தை ஆற்றுதல் உனக்கு அரியதாகுமோ? (எ - று.)

(**வி - ம்.**) வாங்கும் - வளையும் : வளைந்த; ஓர்தல் - ஆராய்தல்.
(கசுசு)

## 97. பொருள்வயிற் பிரிவு தலைமகனுன் உணர்ந்த தோழி தலைமகளுக்குணர்த்தல்

பொருள்வயிற் பிரிவுக்குத் தலைவனால் உடன்படுத்தப்பட்டு உணர்ந்த தோழி அதனைத் தலைவிக்குத் தெரிவித்தல்

**விட்புல வாணருங் காணாப் பசுபதி மேதினியோர்**
**கட்புல னுங்கொண்டு கண்டிடு மாறருட் காட்சிதந்த**
**பெட்புறு மாமது ரைச்சொக்க நாதர் பிறங்கலின்வாய்ப்**
**பட்புரை சொல்லாய் அகன்றார்பொன் தேடநம் பார்த்திபரே.**

(**இ — ள்.**) விண்ணுலகத்து வாழ்வாரும் காணமுடியாத உயிர்த் தலைவராகிய சிவபெருமான், மண்ணுலகத்தவர் தம் கண்ணுகிய புலனையுங்கொண்டு காணுமாறு அருட்காட்சி வழங்கிய, விரும்பத்தக்க பெருமை பொருந்திய மதுரையினகண் எழுந்தருளி யிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்து இசையை யொத்த சொல்லையுடையாய்! நம் மன்னர் பொன் தேடிவர நம்மைப் பிரிந்து சென்றார் (எ - று.)

(**வி - ம்.**) விட்புலவாணர் - விண்ணுலகத்து வாழ்நர்; பசுபதி — உயிர்த் தலைவர்; பண் புரை - இசைபோலும் : (பண் + புரை = பட்புரை.)
(கஎ)

### 98. தலைவி இளவேனிற் பருவங்கண்டு வருந்தல்

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி இன்ப நுகர்ச்சிக்குரிய இள வேனிற் பருவம் வரக்கண்டு வருந்துதல்.

**வீசும் பசுந்தென்ற லான்மாத் தளிர்த்து மிளிருமிந்நாட்**
**காசும் பசும்பொனுந் தேடப் பிரிந்தநங் காதலன்பர்**
**ஆசுந் தெரிந்திலர் போலும் புவியின ராற்றகமும்**
**மாசுந் தவிர்மது ரைச்சொக்க நாதர் வரையகத்தே.**

(இ - ள்.) உலகவர் செய்யும் கரிசையும், குற்றத்தையும் நீக்குகின்ற மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்தில் வீசுகின்ற பசுமையான தென்றற் காற்றினால் மாமரம் தளிர்க்கப்பெற்று விளங்குகின்ற இக் காலத்தே காசையும் பசுமையான பொன்னையும் தேடும்பொருட்டு நம்மைப் பிரிந்து சென்ற, நம்மாட்டுக் காதலாகிய அன்புடையார் பிரிவினான் உண்டாகும் குற்றமும் அறிந்திலர் போலும்! (எ - று.)

(வி - ு.) மா - மாமரம்; ஆசு - குற்றம்; ஆற்று - செய்யும்; அகம் - கரிசு (பாவம்); மாசு - குற்றம்.

பிரிவு நீட்டித்துழி தலைவி இறப்பளாதலின் அதற்குக் கரணியமாதலையே குற்றம் என்று தலைவி கூறியதாகக் கொள்க! (கூஅ)

### 99. தலைவியை யாற்றுவித்தற்குத் தோழி யுரைத்தல்

தலைவன் பிரிவால் வருந்தும் தலைவியை ஆற்றுவிக்கும் பொருட்டுத் தோழி கூறுதல்.

**வென்றிச் சிலைமதன் காகளங் கூவும் வியன்தொனியும்**
**தென்றற் சிறுகால் இரதத்தி னோதையும் சென்றிசைப்ப**
**அன்றற் பொடுபொருள் தேடற் ககன்று ரறிந்துவந்தார்**
**நன்றுற் றருள்மது ரைச்சொக்க நாதர் நகத்தகத்தே.**

(இ - ள்.) மதுரையின்கண் எழுந்தருளி நன்கு அருள் செய்கின்ற சொக்கர்பெருமானது மலையகத்தே அன்று அன்போடும் பொருள் தேடுதற்கு நம்மைப் பிரிந்து சென்றவர், வெற்றியைச் செய்யும் வில்லையுடைய காமனது கொம்பு (குயில்) முழங்கும்

பேரொலியும், மெல்லிய தென்றற் காற்ருகிய தேரின் ஓசையும் சென்று ஒலித்தல் அறிந்து மீண்டு வந்தார் (எ - று.)

(வி - ம்.) காகளம் - கொம்பு; வியன்தொனி - பேரொலி; சிறு கால் - மெல்லிய காற்று:தென்றல்; இரதம் - தேர்; இசைப்ப - ஒலிக்க; அற்பு - அன்பு; நகம் - மலே. (கக)

## 100. தலைமகன் தலைமகளது உருவெளிப்பாடு கண்டு வருந்தல்

*தலைமகன் இடைவிடா நினைப்பினுல் தலைவியின் போலித் தோற்றத்தைக் கண்டு வருந்துதல்.*

**வேலா வலயம் புகழ்சொக்க நாதர் விலங்கலிடை**
**மாலா னவரு மயல்கொளத் தோன்றுமொர் வல்லியதிற்**
**பாலேய் வுறுபிறை பூங்குமிழ் தாமரை பைங்குவளை**
**மேலார் தரஎங்கும் என்முனந் தோன்றும் வியப்பிதென்னே.**

(இ - ள்.) கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தவர் புகழு கின்ற, சொக்கர்பெருமானது மலையகத்துத் திருமாலின் தன்மையை யுடையாரும் மயக்கங் கொள்ளுமாறு ஒரு கொடி தோன்றுகின்றது; அக் கொடியின்கண் பாலையொத்த வெள்ளிய பிறைத்திங்களும், அழகிய குமிழும், தாமரையும், பசுமையான குவளையும் தன்மேல் பொருந்தியிருக்க என் முன்னர்த் தோன்று கின்றது. இஃது என்னே வியப்பு! (எ - று.)

(வி - ம்.) வேலை+வலயம்=வேலாவலயம்-கடலாற் சூழப்பட்ட உலகம்; மாலானவர் – திருமாலின் தன்மையர்; பால் ஏய் - பாலை யொத்த : வெண்மையான. (க00)

## 101. தலைவி தலைவன்வரவு எதிர்கொளல்

*தலைவன் வருதலும் தலைவி முன்னே சென்று அவனை வரவேற்றல்.*

**வையந் துதிக்குநம் மன்னர்வந் தாரென்று வண்மையுறு**
**கையம் புயத்துறை யேந்திவந் தாள்கடம் பாடவிசூழ்**
**ஐயம் தமிழ்மது ரைச்சொக்க நாதர் அடுக்கலிடை**
**மெய்யன்பு பூண்ட விரைமலர்ப் பூங்குழல் மெல்லியலே.**

(இ - ள்.) கடம்பங் காடு சூழுகின்ற, தலைமை வாய்ந்த அழகிய தமிழ் விளங்கும் மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது மலையகத்தே, உண்மையான அன்பு கொண்டுள்ள, மணமலர் சூடியுள்ள அழகிய கூந்தலையுடைய மென்மையான இயல்பினுள், உலகம் போற்றும் நம் தலைவர் வந்தார் என்று வள்ளன்மை வாய்ந்த கையின்கண் நீர்த் துறையகத்துத் தாமரை மலரை ஏந்தி வந்தாள் (எ - று.)

(வி - ம்.) அம்புயம் - தாமரை; துறை - நீர்த்துறை: அடவி - காடு; ஐ – தலைமை; அடுக்கல் - மலை. (க0க)

## 102. தலைமகன் கார்ப்பருவங்கண்டு களித்தியம்பல்

தலைவன் கார்காலம் வரக்கண்டு மகிழ்ந்து கூறுதல்

**வௌவாத் தமிழ்நிதி பொன்னிதி மல்கிமற் றெப்பதியும்**
**ஒவ்வாத் திருமது ரைச்சொக்க நாதர் ஒளிர்வரைமான்**
**செவ்வாய் அமுதுண்டு புல்லினம் யாமிவண் செல்லினங்காள்**
**எவ்வாயு மாரி பொழிந்தூழி வாழி இனியினிதே.**

(இ – ள்.) கள்வராலும் கவரப்படாத தமிழாகிய செல்வமும், பொன்னாகிய செல்வமும் நிறைந்து வேறு எந்த ஊரும் ஒப்பாக மாட்டாத அழகிய மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கர்பெருமானது விளங்குகின்ற மலையகத்து மண்போல் வாளது சிவந்த வாயகத்து அமுதம் உண்டு, யாம் ஈண்டுப் பொருந்தினேம். முகில் கூட்டங்களே! எவ்விடத்தும் மழை பொழிந்து இனி நெடுங்காலம் இனிது வாழ்க! (எ - று.)

(வி - ம்.) வௌவா - கவரப்படாத; மல்கி - நிறைந்து; புல்லினம் - பொருந்தினேம்; செல் - முகில்; வாய் - இடம். (க0உ)

**மதுரைச் சொக்கநாதர்**
**வருக்கக் கோவையுரை முற்றும்**

